

# அம்ருதா

Amrudha Tamil Monthly

Volume 18 Issue 9
ஆண்டு 18 இதழ் 9

April 2024 Rs.30
ஏப்ரல் 2024 ரூ.30








## சென்னையின் ஜூலேலால் உலகம்

- ஹெர்த்தா முல்லர்
- ஸிந்துஜா
- சரவணன் மாணிக்கவாசகம்
- கருணாகரன்
- கவிப்பித்தன்
- பழ. அதியமான்
- சந்தியா நடராஜன்
- கயல்
- கே.பாலமுருகன்
- புதியமாதவி
- பாவண்ணன்
- அ. இருதயராஜ்

ஆண்டு 18 இதழ் 9



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஏப்ரல்-2024 விலை ரூ. 30



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# இந்த இதழில்...

# கலைத் துறையிலும் பரவும் வெறுப்பு!

## பிரபு திலக்

சென்னை சங்கீத வித்வத் சபையின் (The Music Academy) சங்கீத கலாநிதி விருது இந்த ஆண்டு கர்நாடக இசைக் கலைஞர் டி.எம். கிருஷ்ணாவுக்கு அறிவிக்கப்பட்டுள்ளது. இதற்கு ரஞ்சனி காயத்ரி சகோதரிகள் தொடங்கி சில கர்நாடக இசைக் கலைஞர்கள் எதிர்ப்புத் தெரிவித்துள்ளனர். இந்த ஆண்டு சங்கீத வித்வத் சபை மாநாட்டை புறக்கணிக்கப் போவதாகவும் அறிவித்துள்ளனர். இவர்கள் இந்த ஆண்டு மட்டுமல்லாமல் இனி வரும் ஆண்டுகளிலும் சங்கீத வித்வத் சபை நிகழ்ச்சிகளை புறக்கணிக்க வேண்டும் என்றும் கலைஞர்கள் மட்டுமல்லாமல் ரசிகர்களும் இதை பின்தொடர வேண்டும் என்றும் சிலர் தெரிவித்திருக்கிறார்கள். இதெல்லாம் கர்நாடக சங்கீத உலகில் என்னதான் நடக்கிறது என்ற கேள்வியை எழுப்புகிறது?

உலகளவில் கர்நாடக இசைக் கலைஞர்கள், ரசிகர்கள் இடையே மரியாதைக்குரிய அமைப்பாகத் திகழுவது சென்னையில் உள்ள சங்கீத வித்வத் சபை. இந்த அமைப்பு ஒவ்வொரு ஆண்டும் டிசம்பர் மாதம் நடத்தும் இசை நிகழ்ச்சிகள் மிகப் பிரபலமானது. இதற்காகவே உலகின் பல பகுதிகளில் இருந்தும் ரசிகர்கள் சென்னை வருவது வழக்கம். இது ஒரு மாநாடு போல் நடைபெறும். அந்த ஆண்டு சங்கீத கலாநிதி விருது பெறுபவர் இந்த மாநாட்டுக்கு தலைமை தாங்குவார். இதன்படி இந்த ஆண்டு நடைபெறவுள்ள சங்கீத வித்வத் சபையின் 98ஆம் ஆண்டு இசை நிகழ்வுகள் டி.எம். கிருஷ்ணா தலைமையில் நடைபெறும் என்பது குறிப்பிடத்தக்கது.



டி.எம். கிருஷ்ணாவுடன் இந்த ஆண்டு, சங்கீத வித்வத் சபை வழங்கும் சங்கீத கலா ஆச்சார்யா விருது பேராசிரியர் பரசால ரவி, கீதா ஆச்சார்யா ஆகியோருக்கும், டிடிகே விருது திருவையாறு சகோதரர்கள், ஹெச்.கே. நரசிம்மமூர்த்திக்கும், மியூசிகாலஜிஸ்ட் விருது டாக்டர் மார்க்ரெட் பாஸினுக்கும், நிருத்ய கலாநிதி விருது டாக்டர் நீனா பிரசாதுக்கும் அறிவிக்கப்பட்டுள்ளது. இதில் சங்கீத கலாநிதி விருது மட்டும் இப்போது சர்ச்சையாகியுள்ளது.

வயலின், வாய்ப்பாட்டு கலைஞர்களான ரஞ்சனி காயத்ரி சகோதரிகள் தான் முதலில் டி.எம். கிருஷ்ணாவுக்கு விருது வழங்குவதற்கு எதிர்ப்பு தெரிவித்தனர். இது தொடர்பாக சங்கீத வித்வத் சபைக்கு எழுதியிருந்த கடிதத்தில், 2024ஆம் ஆண்டின் மாநாட்டின் ஒரு பகுதியாக டிசம்பர் 25ஆம் தேதி நடக்க இருந்த தங்களுடைய இசை நிகழ்ச்சியில் இருந்து விலகிக்கொள்வதாகவும் தெரிவித்திருந்தனர்.

தொடர்ந்து இந்த கடிதத்தை ஃபேஸ்புக்கில் வெளியிட்டனர். அதில், “இந்த மாநாட்டிற்கு டி.எம். கிருஷ்ணா தலைமை தாங்குவார் என்பதால் இந்த முடிவை எடுத்திருக்கிறோம். கர்நாடக இசை உலகிற்கு அவர் மிகப் பெரிய சேதத்தை ஏற்படுத்தியிருக்கிறார். இந்த சமூகத்தின் உணர்வுகளை அவர் வேண்டுமென்றேயும் மகிழ்ச்சியுடனும் புண்படுத்தியிருக்கிறார். தியாகராஜர், எம்.எஸ். சுப்புலட்சுமி போன்ற மதிப்பிற்குரிய அடையாளங்களை அவமதித்திருக்கிறார். கர்நாடக இசைக் கலைஞராக இருப்பது அவமானத்திற்குரிய



விஷயம் என்பதைப் போன்ற உணர்வை இவரது நடவடிக்கைகள் ஏற்படுத்தியிருக்கின்றன.

பிராமணர்களை இனப் படுகொலை செய்ய வேண்டுமென வெளிப்படையாக பேசிய, இந்த சமூகத்தைச் சேர்ந்த ஒவ்வொரு பெண்ணையும் இழிவுபடுத்திய, சமூகத்தில் மோசமான மொழியைப் பயன்படுத்துவதை சாதாரண விஷயமாக்கிய ஈ.வெ.ரா என்ற பெரியாரை டி.எம். கிருஷ்ணா புகழ்ந்து வருவதை கண்டுகொள்ளாமல் இருப்பது அபாயகரமானது. இவற்றையெல்லாம் புதைத்துவிட்டு, இந்த ஆண்டு மாநாட்டில் இணைவது, ஒரு தார்மீக மீறலாக அமைந்துவிடும்" எனக் குறிப்பிட்டிருந்தனர்.

ரஞ்சனி காயத்ரியின் கடிதத்திற்கு சங்கீத வித்வத் சபையின் தலைவர் என். முரளி பதில் கடிதம் எழுதியுள்ளார். அந்தக் கடிதத்தில், ரஞ்சனி காயத்ரியின் கடிதம் கிட்டத்தட்ட அவதூறு என்று சொல்லத்தக்க வகையில் இருந்ததாகவும் மூத்த, சக இசைக் கலைஞர் மீது மிக மோசமான தாக்குதலை நடத்தியிருப்பதாகவும் தெரிவித்துள்ளார்.

மேலும், "சங்கீத வித்வத் சபையால் 1942ஆம் ஆண்டிலிருந்து வழங்கப்பட்டுவரும் சங்கீத கலாநிதி விருது, கர்நாடக இசையின் மிக உயரிய விருது. ஒவ்வொரு ஆண்டும் யாருக்கு விருதை வழங்க வேண்டும் என முடிவுசெய்வது சங்கீத வித்வத் சபையின் முற்றுரிமை. இசைத் துறையில் குறிப்பிட்ட காலத்திற்கு, தொடர்ச்சியாக மிகச் சிறப்பாக செயல்பட்ட கலைஞர்களே மிகக் கவனத்துடன் இந்த விருதுக்கு தேர்வு செய்யப்படுகிறார்கள். சங்கீத வித்வத் சபையின் நிர்வாகக் குழு இந்த ஆண்டு இந்த விருதுக்கு டி.எம். கிருஷ்ணாவைத் தேர்வு செய்தது. நீண்ட காலமாக இசையுலகில் மிகச் சிறப்பாக செயல்பட்டவர் என்பது கவனத்தில் கொள்ளப்பட்டதே தவிர, வேறு புறக் காரணிகள் எங்கள் தேர்வின் மீது தாக்கம் செலுத்தவில்லை.

உங்களுக்குப் பிடிக்காத இசைக் கலைஞர் ஒருவருக்கு விருது அளிக்கப்படுகிறது என்பதால், இந்த ஆண்டு விழாவிலிருந்து விலகிக்கொள்ள முடிவெடுத்திருப்பதும் மோசமாக விமர்சிப்பதும் கலைஞர்களுக்கு உரிய பண்பல்ல. எனக்கும் அகாடமிக்கும் எழுதப்பட்ட கடிதத்தை நீங்கள் சமூக வலைதளத்தில் பகிர்ந்திருக்கிறீர்கள். இது மரியாதைக் குறைவானது என்பதோடு உங்கள் கடிதத்தின் நோக்கம் குறித்த சந்தேகத்தையும் எழுப்புகிறது" என்று குறிப்பிட்டுள்ளார்.

இதனிடையே, ரஞ்சனி காயத்ரி சகோதரிகள் அறிவிப்பு ஆதரவும் எதிர்ப்புமாக கர்நாடக இசை உலகில் சலசலப்பை ஏற்படுத்திய நிலையில், திருச்சூர் சகோதரர்கள் உட்பட மேலும் சில கலைஞர்களும், ஆன்மீக சொற்பொழிவாளரான துஷ்யந்த் ஸ்ரீதரும், டி.எம். கிருஷ்ணாவுக்கு விருது வழங்குவதற்கு எதிர்ப்புத் தெரிவித்து சங்கீத வித்வத் சபை மாநாட்டை புறக்கணிக்கப் போவதாக தெரிவித்துள்ளனர்.

2017ஆம் ஆண்டு சங்கீத கலாநிதி விருது பெற்ற சித்ரவீணை ரவிகிரண் அந்த விருதையும் விருதுத் தொகையும் திருப்பி அளிக்கப்போவதாகவும், "எதையும் விட கொள்கை முக்கியம் என்பதை பரிசீலித்தே இந்த முடிவை எடுத்துள்ளேன்" என்றும் சித்ரவீணை ரவிக்கிரண் தெரிவித்துள்ளார்.

(தொடர்ச்சி 52ஆம் பக்கம்)

நோபல் கமிட்டியின் செயல்பாடு, அதைச் சார்ந்துள்ள நடுநிலைமை அல்லது இல்லாமை, படைப்பு உயர்ந்ததா அல்லது மட்டமா என்று ஒவ்வொரு முறையும் பரிசு முடிவைத் தெரிவிக்கும் போது எழும் சர்ச்சைகள் எழுந்து, எழுந்தது போல் அடங்கியும் விடுகின்றன. ஆனால், உலக இலக்கியங்களுக்குத் தரப்படும் பரிசுகள் பலவற்றுக்கும் முன்பாக நோபல் பரிசு இன்றும் ஓர் உயர்ந்த பீடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது.

நோபல் உரைகள் எப்போதும் இலக்கிய ஆசிரியனின் காலத்திய சமூக, பொருளாதார, அரசியல் மற்றும் கலைச் சூழல்களைப் பிரதிபலிக்கும் விதத்தில்தான் வெளிப்படுகின்றன. இந்த உரைகளில் காணப்படும் ஒரு பொது அம்சம் படைப்பாளிகளின் இளமைக் காலமும் அவர்களின் படைப்புகளில் ஆழமாக அது பதிக்கும் விவரணைகளும்தான். இவ்வுரைகள் வாசகர் மனதில் எழுப்பும் சீரிய சிந்தனைகளும் ஆழமான புரிதல்களும் அவற்றைப் பேருரைகளாக மாற்றி விடுகின்றன. ஆனால், அவற்றை என்றும் மாறாத புனித வாக்குகளென சடுதியில் தீர்மானத்துக்கு வரவேண்டிய அவசியத்தை உண்டாக்காது, படைப்பாளியின் நோக்கம், அவன் எழுத்து பிரதிபலிக்கும் சமூகச் சூழல், இலக்கியப் பரப்புக்குள்ளேயே நிகழும் ஒத்த அல்லது மாறுபட்ட கருத்தாழங்கள் ஆகியவற்றைப் பரிசீலனை செய்கின்றன.

நோபல் உரைகளை அம்ருதா வாசகர்களின் முன் வைக்கிறோம் - மாதம் ஒன்றாக.

# ஹெர்த்தா முல்லர்

## 2009

# சொல் அறிந்திருக்கும் மாயச் சுழல்

## தமிழில்: ஸிந்துஜா

தினமும் காலையில் நான் வெளியே கிளம்பும் முன் வாசல் கேட்டில் நின்றுகொண்டு என் அம்மா, "உன் கைக்குட்டையை எடுத்துக்கொண்டாயா?" என்று கேட்பாள். என் கைவசம் அது இருக்காது. ஆகவே நான் மறுபடியும் வீட்டின் உள்ளே சென்று ஒரு கைக்குட்டையை எடுத்துக்கொண்டு வருவேன். அவள் அந்தக் கேள்வியைக் கேட்க வேண்டும் என்றே நான் கைக்குட்டையை எடுத்துக்கொண்டு வரமாட்டேன்! என் அம்மா என்னைக் கவனித்துக்கொள்கிறாள் என்பதை உறுதிப்படுத்திக்கொள்வது இந்தக் கைக்குட்டை மூலம்.

"உன்னிடம் கைக்குட்டை இருக்கிறதா?" என்ற கேள்வி அவள் மறைமுகமாக என் மீது காட்டும் அன்பின்வெளிப்பாடு. எதையும் வெளிப்படையாகக் காண்பிப்பது சற்றுச் சங்கடமான விஷயம். விவசாயிகளின் வழக்கத்தில் இல்லாத ஒன்று. சாதாரணமாகவும் சற்றுக் கண்டிப்பான குரலுடனும் வேலை வாங்கும் சாதுர்யத்துடனும் வெளி வரும் சொற்கள். நயமற்றதாக இருந்தாலும் அவற்றில் மென்மை இழைந்திருக்கும்.



ஒவ்வொரு நாளும் கைக்குட்டை எடுத்து வராது மறுபடியும் உள்ளே சென்று எடுத்துக்கொண்டு வந்தேன். அப்படி இருந்தால்தான் வீதியில் செல்லும் போது கைக்குட்டையின் கூட என் அம்மாவும் என்னுடன் இருப்பதாக எனக்குத் தோன்றும்.

இருபது வருஷங்கள் கழித்து நான் ஒரு நகரத்தில் தனியாக இருந்தேன். ஒரு தொழிற்சாலையில் மொழிபெயர்ப்பாளராக வேலை பார்த்தேன். காலை ஐந்து மணிக்கு எழுந்து விடுவேன். ஆறரை மணிக்கு வேலையில் இருக்க வேண்டும். தொழிற்கூடத்தில் பளாரென்று அறைவது போல தேசிய கீதம் ஒலிக்கப்படும். பகல் உணவு இடைவேளையில் தொழிலாளர்கள் கோரஸாகப் பாடுவார்கள். காலித் தட்டுக்கு முன்னால் கண்களும் கைகளும் எண்ணெய்த் திட்டில் மிதக்க உட்கார்ந்திருப்பார்கள். அவர்களின்



உணவு, நியூஸ் பேப்பர் தாளில் சுற்றப்பட்டிருக்கும். காகிதத்தைச் சுருட்டி வீசி எறிந்துவிட்டு உணவை எடுத்து உண்பார்கள்.

இம்மாதிரி இரண்டு வருஷங்கள் சென்றன. ஒவ்வொரு நாளும் முந்திய நாளே.

மூன்றாவது வருஷம் இந்த அன்றாட நடைமுறை ஒரு முடிவுக்கு வந்தது. ஒரு வாரத்தில் மூன்று முறை என் அலுவலகத்துக்குக் காலையில் ஒரு திடகாத்திரமான நீல விழிகளை உடைய மனிதன் வந்தான். செக்யூரிட்டியில் இருந்து வந்த ஆஜானுபாகுவான மனிதன்.

முதல் தடவை வந்தபோது எனக்கு முன்னால் நின்றான். திட்டினான். போய் விட்டான். இரண்டாம் முறை வந்தபோது தான் அணிந்திருந்த கோட்டைக் கழற்றி ஹேங்கரில் தொங்கவிட்டான். எனக்கு எதிரிலேயே உட்கார்ந்தான். அன்று நான் கொண்டு வந்திருந்த மலர்களை குடுவையில் வைத்து அலங்கரித்திருந்தேன். அந்த மனிதன் என்னைப் பார்த்து நான் மற்றவர்களின் குணாதிசயங்களை எடை போடுவதில் சிறப்பானவள் என்றான். அவனது குழறலான குரலைக் கேட்க எனக்குச் சற்று அசௌகரியமாக இருந்தது.

நான் பதிலுக்கு அவனிடம் அவனுடைய பாராட்டுகளுக்கு நான் தகுதியானவள் அல்ல என்றும் மலர்களை நான் புரிந்துகொள்வது போல மனிதர்களை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை என்றும் பதிலளித்தேன். அப்போது அவன் சற்று வன்மம் நிறைந்த குரலில் எனக்கு மலர்களைப் பற்றித் தெரிந்ததை விட அவனுக்கு என்னைப் பற்றி நன்கு தெரியும் என்றான். அதற்குப் பின் தன்னுடைய கோட்டை எடுத்து அணிந்துகொண்டு அங்கிருந்து நகன்றான்

மூன்றாவது தடவை அவன் வந்து உட்கார்ந்த போது நான் நின்று கொண்டிருந்தேன். ஏனென்றால் அவனுடைய கைப்பெட்டியை என் நாற்காலியில் வைத்திருந்தான். அதை எடுத்துத் தரையில் வைக்க எனக்குத் துணிவிருக்கவில்லை. அவன் என்னை முட்டாள் என்றும் பொறுப்பைத் தட்டிக் கழிப்பவள் என்றும் இழி மகள் என்றும் கேடு கெட்ட நாய் என்றும் திட்டினான். மலர்க் குடுவையை மேஜையின் முனையை நோக்கி வீசினான். மேஜையின் மீது ஒரு

வெற்றுத் தாளையும் பேனாவையும் வைத்தான். நான் சொல்லுவதை எழுது என்று என்னைப் பார்த்து உறுமினான். நான் நின்றவாறே அவன் சொல்லுவதை எழுத ஆரம்பித்தேன் - என் பெயர், பிறந்த தினம், என் முகவரி.ஆகியவற்றை. அடுத்ததாக அவன் கூறியதை, நான் யாரிடமும் கூற முடியாததை, என் மிக நெருங்கிய தோழி அல்லது உறவினராக இருந்தால் கூடச் சொல்ல முடியாததை எழுதச் சொன்னான்: “நான் ஒத்துழைக்க உறுதியளிக்கிறேன்” என்று. அந்தத் தருணத்தில் நான் எழுதுவதை நிறுத்தி விட்டேன்.

பேனாவைக் கீழே வைத்துவிட்டு ஜன்னலருகே சென்றேன். அங்கிருந்து வெளியில் தெரிந்த அழுக்கான, சீரற்ற, பள்ளங்கள் நிரம்பிய, கூம்பு முதுகை நினைவுபடுத்தும் வீடுகள் நிறைந்த தெருவைப் பார்த்தேன். மற்ற எல்லாத் தெருக்களையும் விட இந்தத் தெருவுக்கு மாட்சிமை வீதி என்று பெயர் வைத்திருந்தார்கள்! மாட்சிமை வீதியில் நின்ற ஒரு மல்பெரி மரத்தின் உச்சியில் ஒரு பூனை உட்கார்ந்திருந்தது. பூனைக்கு மேலே அதிகாலைச் சூரியன் ஒரு மஞ்சள் நிறப் பாத்திரம் போலப் பிரகாசித்தது. நான் வெளியிலிருந்த தெருவைப் பார்த்து, “இந்த மாதிரி வேலைக்கான குணம் என்னிடம் கிடையாது” என்றேன்.

குணம் என்ற வார்த்தை செக்யூரிட்டியை வெறியனாக்கி விட்டது. அவன் தாளை எடுத்துச் சுக்கு நூறாகக் கிழித்துத் தரையில் வீசினான். அதன் பின் என்னை அவர்கள் கூடாரத்தில் சிக்க முயற்சி செய்ததை அவனுடைய பாஸிடம் காண்பிக்க வேண்டும் என்று நினைத்தது போல அந்தக் கிழித்துப் போடப்பட்ட காகிதச் சிதறல்களைக் குனிந்து பொறுக்கி எடுத்துத் தன் பெட்டியில் அடைத்தான். அதன்பிறகு நீண்ட பெருமூச்சை விட்டபடி தன் தோல்வியை ஒப்புக்கொள்வது போல மலர்க் குடுவையை எடுத்துக் கோபத்துடன் சுவற்றின் மீது எறிந்தான். அது பெரும் சத்தத்துடன் கீழே விழுந்து சிதறியது. காற்றுக்கு ஏதோ பற்கள் இருந்தன போல. அவன் தனது பெட்டியைக் கையிடுக்குள் வைத்துக்கொண்டபடி, “உன்னை நாங்கள் ஆற்றில் மூழ்கடிப்போம். உன் இந்தச் செயலுக்கு நீ வருந்தப் போகிறாய்” என்றான். நான் எனக்குச் சொல்லிக்கொள்ளுவது போல, “நான் நீ கொடுத்ததை ஏற்றுக் கையெழுத்திட்டிருந்தால் என் வாழ்க்கையை என்னாலேயே வாழ முடியாது போயிருக்கும். அப்போது நான் இறப்பதை நானே செய்ய வேண்டியிருக்கும். அதற்குப் பதிலாக நீயே அதைச் செய்து விடு” என்றேன். அவன் அலுவலகக் கதவைத் திறந்துகொண்டு போய்விட்டான். வெளியே மாட்சிமை வீதியின் பூனை மரத்திலிருந்து அருகே இருந்த வீட்டின் உச்சிக்குத் தாவிச் சென்றது. மரத்தின் கிளை ஒன்று அசைந்து அசைந்து ஆடியது.

மறுநாள் இழுபறிப் போர் ஆரம்பமாயிற்று. அவர்கள் நான் பாக்டரியில் இருக்கக் கூடாது என்று விரும்பினார்கள். ஒவ்வொரு தினமும் காலை ஆறரை மணிக்கு நான் கம்பனியின் நிர்வாகியிடம் ரிப்போர்ட் செய்ய வேண்டும். தொழிற்சங்கத் தலைவனும் காரியதரிசியும் அவரது அலுவலகத்தில் இருந்தார்கள்.

“உன்னிடம் கைக்குட்டை இருக்கிறதா?” என்று முன்பு என் அம்மா கேட்ட மாதிரி நிர்வாகி தினமும் இப்போது கேட்க ஆரம்பித்தார்: ”வேறு வேலை உனக்குக் கிடைத்து விட்டதா?” நானும் ஒவ்வொரு காலையிலும் அதே பதிலைச் சொன்னேன்: “நான் வேலை எதுவும் தேடவில்லை. இங்கு வேலை பார்ப்பதையே நான் விரும்புகிறேன். நான் என் பணிநிறைவுக் காலம் வரை இங்கேயே இருக்க விரும்புகிறேன்.”

நான் ஒரு நாள் காலை வேலைக்கு வந்த போது என்னுடைய கனமான அகராதிகள் என் அலுவலகத்துக்கு வெளியே தரையில் கிடந்தன. நான் கதவைத் திறந்தேன். என் மேஜைக்கு முன்னால் ஓர் இன்ஜினீயர் உட்கார்ந்திருந்தான். என்னைப் பார்த்து, “உள்ளே வருவதற்கு முன்னால் கதவைத் தட்டிவிட்டு வர வேண்டும் என்று உனக்குத் தெரியாதா? இது என்னுடைய இடம். இங்கே உனக்கு ஒரு வேலையும் இல்லை” என்றான். நான் என் வீட்டிற்குத் திரும்பிச் செல்ல முடியாது. அனுமதி இல்லாது விடுமுறை எடுத்தாய் என்று என்னை வேலையை விட்டு நீக்கி விடுவார்கள். எனக்கென்று ஓர் அலுவலகம் இல்லாமல் போய்விட்டது. ஆனால், நிச்சயமாக நான் வேலைக்கு வந்துதான் ஆக வேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் நான் இதில் தோல்வி அடையலாகாது.

மாட்சிமைத் தெருவில் என்னுடன் கூட வரும் என் அலுவலகத் தோழிக்கு நடந்த விஷயங்கள் எல்லாம் தெரியும். முதலாவதாக அவள் எனக்கு அவளது அலுவலக மேஜையின் ஒரு பகுதியை ஒழித்துக் கொடுத்து அமர வைத்தாள். ஆனால், ஒரு நாள் காலையில் அவளது அறை வாசலில் நின்றுகொண்டு, “உன்னை உள்ளே விட என்னால் முடியாது. நீ உளவு வேலை செய்து காட்டிக் கொடுப்பவள் என்று எல்லோரும் கூறுகிறார்கள்” என்றாள். இந்த வதந்தி அலுவலகம் முழுவதும் பரவியது. இது ஒரு மோசமான அனுபவம்.

ஒரு பலவந்தத் தாக்குதலை எதிர்த்து விடலாம். ஆனால், அவதூறை? ஒவ்வொரு நாளும் என் சாவு உள்பட நான் எதையும் எதிர்கொள்ளத் தயாராயிருந்தேன். ஆனால், துரோகத்தைச் சமாளிக்க முடியவில்லை. எவ்வளவு முனைப்புடன் தயாராயிருந்தாலும், தாங்கிக்கொள்ள முடியவில்லை. அவதூறு என்பது ஆபாசமான ஒன்று. தற்காத்துக்கொள்ள முடியாத போது மூச்சடைப்பது போன்ற உணர்வு ஏற்படுகிறது. நான் எதை ஏற்க மறுத்தேனோ அதுவாகவே ஆகிவிடுவேனோ என்ற பயம் உண்டாயிற்று. நான் மற்றவர்களைக்



காட்டிக் கொடுக்கும் வேலையைச் செய்ய ஒப்புக் கொண்டிருந்தால், எவ்விதத் தயக்கமும் இல்லாமல் என்னை அவர்கள் ஏற்றுக் கொண்டிருந்திருப்பார்கள். நான் ஒப்புக்கொள்ளாததால் அவர்கள் என்னைத் தண்டித்துக் கொண்டிருந்தார்கள்.

இப்போது எனக்கென்று அலுவலகம் இல்லாத போதும் நான் வேலைக்கு வந்தே ஆகவேண்டும் என்ற நிலையில், என் சிநேகிதி அவளறைக்குள் வர அனுமதி தர மறுத்ததால், நான் மாடிப்படிகள் ஆரம்பித்த இடத்தில் நின்ற சுவரின் மேல் சாய்ந்தபடி என்ன செய்வதென்று யோசித்தேன். சில முறைகள் படிகளில் ஏறியும் இறங்கியும் பார்த்தேன். சட்டென்று நான் என் அம்மாவின் குழந்தையைப் போல உணர்ந்தேன். ஏனெனில், என்னிடம் ஒரு கைக்குட்டை இருந்தது. இரண்டாவது மாடிக்கும் மூன்றாவது மாடிக்கும் இடையே சென்ற படிகள் ஒன்றில் அதனை விரித்து அதன் மீது உட்கார்ந்து கொண்டேன். கனமான என் அகராதிகளை முழங்காலில் வைத்துக்கொண்டு ஹைட்ராலிக் இயந்திரங்களின் விவரங்களை மொழிபெயர்க்க ஆரம்பித்தேன். ஒதுக்கப்பட்டுவிட்ட எனக்கு, எனது கைக்குட்டையே அலுவலகம் போல ஆகிவிட்டது. மதிய உணவு இடைவேளையில் என் சிநேகிதி என்னுடன் சேர்ந்துகொண்டாள். வழக்கம் போலத் தொழிலாளர்கள் கோரஸாக மக்களின் சந்தோஷம் பற்றிப் பாடியதை ஒலி பெருக்கியில் கேட்க முடிந்தது. என் தோழி சாப்பாடு முடிந்த பின்னர் என் தோளில் சாய்ந்துகொண்டு தேம்பினாள். நான் அழவில்லை. நான் உறுதியாக நிற்க வேண்டும். நீண்ட காலம் வரை. ஆனால், சில வாரங்களுக்குப் பின் என்னை வேலையிலிருந்து நீக்கிவிட்டார்கள்.

முன்பு கூறியபடி ஒதுக்கப்பட்டு, படிகளில் உட்கார்ந்திருந்த நாளில் STAIR என்ற வார்த்தையின் அர்த்தம் என்ன என்று அகராதியில் தேடினேன்: முதல் படிக்கு BULLNOSE என்று பெயர். HAND என்பது செல்லும் திசையைக் காட்டுவது. தொடர்ச்சியாக மேலே எடுத்துச் செல்லும் படிக்கட்டுகளுக்குப் பெயர் NOSING. ஏற்கனவே ஹைட்ராலிக் இயந்திரங்களின் பாகங்களின் பெயர்கள் அழகாக இருந்ததை நான் அறிவேன்: DOVETAIL, GOOSENECK, ACORNNUTS, மற்றும் EYE BOLTS. இப்போது படிக்கட்டுகளும் மனித உறுப்புகளின் பெயர்களைக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் படிக்கட்டே ஓர் உடல் எனத் தோன்றியது. மரக்கட்டையோ கல்லோ சிமிண்ட்டோ இரும்போ - இவற்றில் எது மூலமாக ஆக்கப்பட்டிருந்தாலும்.

மக்களுக்கு ஏன் இந்த ஜடப் பொருள்கள் மீது தங்கள் அடையாளங்களை, பெயர்களைப் பொறித்துக்கொள்ள வேண்டும் என்னும் தணியாத ஆசை? மனித உடலின் பாகங்களின் பெயர்களைக் கடினமான இந்த உயிரற்ற பொருள்களுக்கு அளித்து மனிதர்கள் அடையும் அல்ப திருப்தி எதற்காக? கடின உழைப்பு மேற்கொள்ளும் உழைப்பாளிகளுக்கு இந்தப் பெயர் சூட்டல்கள் இங்கிதமான உணர்வைத் தருகிறதா என்ன? ஒவ்வொரு துறையிலும்

உள்ள வேலைகள் இம்மாதிரியான பழக்கத்தைக் கொண்டிருக்கிறதா? என் அம்மாவின் கைக்குட்டை பற்றிய கேள்வியைப் போல?

நான் சிறுமியாக இருந்த போது எங்கள் வீட்டில் கைக்குட்டைகள் வைக்க ஒரு இழுப்பறை இருந்தது. அது இரண்டு வரிசைகளைக் கொண்டிருந்தது. ஒவ்வொன்றிலும் மூன்று அடுக்குகள். இடது பக்கம் என் தந்தையின், என் தாத்தாவின் கைக்குட்டைகள். ஆண்களுக்கான பகுதி. வலது பக்கம் என் அம்மா, பாட்டிக்கான பெண்களின் கைக்குட்டைகள் அடங்கியது. நடுவில் எனக்கான சிறுமியின் கைக்குட்டைகள் பகுதி.

இந்த இழுப்பறை கைக்குட்டைகளின் வடிவில் தீட்டப்பட்ட சித்திர அமைப்பு போல இருந்தது. ஆண்களின் கைக்குட்டைகள் வெள்ளை, பழுப்பு, சாம்பல் நிறங்களில் பெரிய அளவில் இருந்தன. பெண்களின் கைக்குட்டைகள் சிறிய அளவில் நீலம், சிவப்பு அல்லது பச்சை நிறங்களில் இருந்தன. குழந்தைகளினுடையவை இன்னும் சிறிய அளவில் மலர்கள் அல்லது மிருகங்கள் தீட்டப்பட்ட சித்திரங்களுடன் இருந்தன. தினமும் உபயோகிப்படுபவை முன் வரிசையிலும் ஞாயிற்றுக் கிழமை உபயோகிக்கப்பட்ட வேண்டியவை பின் வரிசையிலும் பிரித்து வைக்கப்பட்டன. ஞாயிற்றுக் கிழமை அணிந்திருக்கும் உடைக்கு மேட்சான கலரில் கைக்குட்டையும் இருக்க வேண்டும்.

எங்கள் வீட்டில் கைக்குட்டைக்குத் தரப்பட்ட முக்கியத்துவம், நாங்கள் உட்பட, வேறு யாருக்கும் எதற்கும் கிடைத்ததில்லை. அதன் உபயோகங்கள் பலதரப்பட்டவை: மூக்கடைப்பு, ஜலதோஷம், கைகால்களில் அடி ஆகியவை ஏற்படும் போது, அழும்போது,துக்கத்தை அடக்கிக்கொள்ள வேண்டிய போது, தலைவலிக்குக் குளிர்ந்த நீரில் நனைத்துத் தலையில் இறுக்கக் கட்டிக்கொள்ள வேண்டிய போது, வெய்யில் அல்லது மழையின் போது தலையின் மீது சுற்றிக்கொள்ள,எதையாவது மறக்கக்கூடாது என்றால் ஒரு நுனியில் முடிச்சுப் போட்டுக்கொள்ள, கனமான சாமானைக் கையில் பிடித்துத் தூக்கிக்கொண்டு வர வேண்டுமென்றால் கையில் சுற்றிக்கொள்ள, ரயில் நிலையத்தில் வண்டி கிளம்பும் போது குட் பை என்று அசைக்க!

எங்களுடைய பனத் மொழியில் கண்ணீர் என்னும் வார்த்தை ரொமானிய மொழியில் டிரெயின் என்பது போல இருக்கும். ஆதலால் இருப்புப் பாதையில் வண்டிச் சக்கரங்கள் உராய்ந்துகொண்டே செல்லும் போது அது அழுகையைப் போல எனக்கு ஒலிக்கும். கிராமத்தில் யாராவது இறக்கும் போது மோவாய்க் கட்டையைக் கைக்குட்டையால் இறுகக் கட்டி வாய் மூடியிருக்கும்படி செய்வார்கள். நகரத்தில் சாலை ஓரத்தில் ஒருவர் மரணமடைந்தால், வழியில் செல்பவர், மரணம் அடைந்தவர் முகத்தைக் கைக்குட்டையால் மூடி அந்த மரணத்தை மற்றவர்களுக்குத் தெரியப்படுத்துவார்.

கோடை நாள்களில் பெற்றோர்கள் அவர்களது குழந்தைகளை மாலையில் கல்லறைகளைச் சுற்றி இருக்கும் பூச் செடிகளுக்கு நீரூற்ற அனுப்புவார்கள். நாங்கள் இரண்டு அல்லது மூன்று பேர் சேர்ந்த குழுவாக நீரூற்றுவோம். பிறகு நாங்கள் தேவாலய வாசல்படிகளில் நெருக்கியடித்துக் கொண்டு உட்காருவோம். கல்லறைகளிலிருந்து சுருள் சுருளாக வெள்ளைப் புகை வருவதைப் பார்ப்போம். அவை மெலிதாகப் பறந்து மறைந்து விடும். எங்களுக்கு அவை இறந்தவர்களின் ஆன்மாக்கள் என்று தோன்றும். மிருகங்கள், பாட்டில்கள், கண்ணாடிக் கோப்பைகள், கையுறைகள், கால் உறைகள் என்று பலவிதத் தோற்றங்களில் அவை வரும். அவ்வப்போது இருட்டின் கறுப்பு நிற பார்டருடன் வெள்ளைக் கைக்குட்டை.

பின்னாளில் ரஷ்யச் சிறைக்கு நாடு கடத்தப்பட்ட ஆஸ்கர் பாஸ்டியோரை சந்திக்கச் சென்றேன். அப்போது அவரது அனுபவத்தைப் பற்றிக் கேட்ட போது ஒரு வயதான ரஷ்யப் பெண்மணி அவருக்கு அளித்த மெல்லிய துணியாலான கைகுட்டையைப் பற்றிச் சொன்னார். அவளுடைய மகன் ஆஸ்கரின் வயதை ஒத்தவன் என்றாலும் அவனை வெகு தொலைவில் உள்ள தண்டனை பெற்றவர்கள் அடங்கிய படையில் வைத்திருந்தார்கள். “என் மகனும் நீயும் அவரவர் வீடுகளுக்கு விரைவில் திரும்புவீர்கள்” என்றாள் அவள்.

பசியால் வாடிய ஆஸ்கர், தன்னிடமிருந்த கரியைக் கொடுத்து கொஞ்சம் உணவை வேண்டி அவள் வீட்டுக் கதவைத் தட்டிய தருணம் அது. அவள் சூடான சூப் ஒன்றைப் பாத்திரத்தில் இட்டு ஆஸ்கருக்கு கொடுத்தாள். குனிந்து குடிக்கும் போது பாத்திரத்தில் ஆஸ்கரின் முகம் இடித்து சூப் ஒட்டிக்கொண்டதால் துடைத்துக்கொள்ள அதுவரை யாரும் உபயோகப்படுத்தியிராத ஒரு புதிய கைக்குட்டையை அளித்தாள். batiste என்னும் பட்டு நூலால் தைக்கப்பட்ட அழகிய சித்திர வேலைப்பாடுகள் நிறைந்த அந்த நேர்த்தியான கைக்குட்டை வாங்கிக்கொண்ட ஆஸ்கரை அணைத்துக்கொண்டு நெகிழ வைத்தது. அது மிகச் சிறந்த வேலைப்பாடுடைய மெல்லிய துணியின் மேன்மையையும் ஆஸ்கரது சிதிலமுற்ற மனநிலையின் வெளிப்பாட்டையும் உள்வாங்கிக் கொண்டதாக இருந்தது. உலகப் பற்று அற்ற ஓர் ஏழை, இவ்வுலகில் தொலைந்துவிட்ட ஓர் குழந்தை இவை இரண்டையும் அவள் வீட்டில் ஒரு சேரக் கண்டாள் அந்த மூதாட்டி. இவ்விருவருக்கும் காட்சி தந்த அன்பு நிறைந்த பெண்மணி என்று அவளைப் பற்றி ஆஸ்கர் நினைத்தார். முன் அறிமுகமற்ற ருஷ்யப் பெண்மணி மற்றும் உலகத்துடன் ஒட்ட ஒழுகிய தாய் என்ற

(தொடர்ச்சி 13ஆம் பக்கம்)

(10ஆம் பக்கத் தொடர்ச்சி)

*இருவரும் ஒருவரே எனக் கணித்த தருணத்தில் எழுந்த ஒரு கேள்வி, உங்களிடம் ஒரு கைக்குட்டை இருக்கிறதா?.*

*இக்கதையைக் கேட்ட பின்னர் என் மனதில் தோன்றிய கேள்வி: "உங்களிடம் ஒரு கைக்குட்டை இருக்கிறதா?" என்பது உலகளாவிய ஒன்றா? அது உலகெங்கும் தன்னை நீட்டித்துக் கொண்டுள்ளதா? உறையும் பணியையும் இளஞ் சூட்டையும் அடங்கியுள்ள இவ்வுலகம் பூராவிலும்? அது மலைகளையும் புல்வெளிகளையும் கடந்து நாடுகளின் எல்லைகளைத் தாண்டிச் செல்கின்றதா? தண்டனைக்கான சிறைச்சாலைகளைப் பாலித்துவரும் பெரும் சாம்ராஜ்யங்களை அது அடைய முடியுமா? "உங்களிடம் ஒரு கைக்குட்டை இருக்கிறதா?" என்னும் கேள்வியை ஒழித்துக்கட்டி விட முடியாதா? ஓர் உளியையும் சுத்தியலையும் வைத்துக்கொண்டு? ஸ்டாலினிச மறு கல்விப் பயிற்சியின் கூடங்கள் மூலமாக?*

*நான் பல வருஷங்களாக ரொமானிய மொழி பேசுகின்றவள் என்றாலும் ஆஸ்கருடன் பேசும் போதுதான் எனக்குத் தெரிந்தது: கைக்குட்டைக்கான ரொமானிய வார்த்தை batista என்று. ஒரு வார்த்தையின் உள் அர்த்தத்தை முழுமையாக வாங்கிக்கொள்ளும் ரொமானிய மொழி ரசிக்கத்தக்கது; எந்த ஒரு விஷயத்திலும் அதன் அடிநாதத்தை ஊடுருவிச் சென்று பார்க்கும் வல்லமை நிறைந்த மொழியாக அது இருந்தது. BATISTA என்னும் வார்த்தை அதன் அர்த்தத்தை வெளிப்படுத்த அலைய வேண்டியதில்லை. வார்த்தையே போதும் கைக்குட்டை என்று காண்பிக்க. ஏதோ எல்லாவிதமான கைக்குட்டைகளும் உருவாக்கப்படுவது batiste மூலம் என்பது போல..*

*இரட்டை மகன்களைக் கொண்ட ஓர் இரட்டைத் தாயை நினைவுறுத்தும் தொல்பொருள் ஒன்றைப் போல ஆஸ்கர் அந்தக் கைக்குட்டையைத் தனது பெட்டிலடியில் வைத்திருந்தார். ஐந்து வருட சிறை வாழ்க்கைக்குப் பின் அவர் அதை ஊருக்கு எடுத்து வந்தார். ஏனெனில் அந்தக் கைக்குட்டை அவருடைய அச்சத்தையும் நம்பிக்கையையும் அடக்கியதாய் இருந்தது. அச்சமும் நம்பிக்கையும் உங்களை விட்டு விலகும் போது நீங்கள் இறந்து விடுகிறீர்கள்.*

*வெள்ளைக் கைக்குட்டையைப் பற்றி நாங்கள் பேசிய பிறகு ஒரு நாள் பாதி இரவு முழுவதும் நான் ஆஸ்கரையும் கைக்குட்டையையும் வைத்து வெள்ளை அட்டையில் வார்த்தைகளினால் ஆன கொலாஜ் ஒன்றைச் செய்தேன்.*

புள்ளிகள் இங்கு நடனமிடுகின்றன என்று பியா சொல்கிறாள்.
நீண்ட பால் வெள்ளை நிறத் தண்டுடன் கூடிய
சாம்பல் - பச்சை வண்ணத் தொட்டியில்
பட்டுக் கயிறுகள் மிதக்கும் கண்ணாடிக் குடுவையை நீ
நெருங்குகிறாய்.
எல்லாப் பொருள்களும் வெளியேற தயாராக இருக்கின்றன.
இங்கே பார். நான்தான் ரயில் பயணி.
பெட்டியில் அடங்கிக் கிடக்கும் செர்ரிப் பழம்.
அயலாருடன் பேசாதே.
தொலைபேசியில் உரத்துப் பேசுவதும் வேண்டாம்.

*இதை எடுத்துக்கொண்டு நான் ஆஸ்கரைப் பார்க்கச் சென்ற போது, 'ஆஸ்கருக்காக' என்றும் எழுதி ஒட்டி விடு என்றார். நான் அவரிடம், "இது உங்களுக்காக நான் கொண்டு வந்தது" என்றேன். "அதை எழுதி மேலே ஒட்டி விடு. இல்லாவிட்டால் அட்டை யாருக்கானது என்று தெரியாமல் போய்விடும்" என்றார். நான் வீட்டிற்குச் சென்று 'ஆஸ்கருக்காக' என்று எழுதி ஒட்டினேன். அடுத்த வாரம் ஆஸ்கரின் வீட்டுக்குச் சென்று கொடுத்துவிட்டு வந்தேன். அவர் வீட்டு வாசலை விட்டு நான் வெளியே வரும் போது முதல் தடவை நான் கைக்குட்டையை எடுத்துக்கொண்டு வரவில்லை என்றும் இப்போது இரண்டாம் முறை வந்த போதுதான் கைக்குட்டையை எடுத்துக்கொண்டு வந்தேன் என்றும் தோன்றியது.*

*மற்றொரு கதையும் ஒரு கைக்குட்டையுடன் முடிகிறது: என் தாத்தா, பாட்டிக்கு மாட்ஸ் என்றொரு பிள்ளை இருந்தான். 1930களில் திமிசோரவுக்கு தொழில் படிப்பு படிக்க அனுப்பப்பட்டான். குடும்பத் தொழிலான தானிய வியாபாரம், பலசரக்கு கடை நடத்துவது ஆகியவற்றை அவன் தொடரட்டும் என்று.*

*அந்தப் பள்ளியில் நாஸி வெறி மிகுந்தவர்கள் ஆசிரியர்களாகப் பணி புரிந்தார்கள். மாட்ஸ் தொழில் படிப்பு கற்பதற்கு அப்பால் அவனை நாஸியாக மாற்றும் முயற்சிகள் நடந்தன. மூளைச்சலவை செய்தார்கள். படிப்பு முடிந்த போது மாட்ஸ் முழுக்க முழுக்க நாஸி வெறியனாக மாறிவிட்டான். யூத எதிர்ப்பைத் தீவிரமாகச் செய்தான். கடைந்தெடுத்த முட்டாளாகி விட்டான். என் தாத்தா அவனை எவ்வளவோ கண்டித்துப் பார்த்தார். தங்கள் குடும்பத் தொழில் முன்னேற்றத்துக்கு உதவி செய்தவர்களில் பெரும்பாலோர் யூதர்கள் என்று அவனிடம் மன்றாடினார். அவன் கேட்காத போது அவனை அடித்துப் பின்னி எடுத்துவிட்டார். ஆனால், மூளை மரத்து விட்ட இளைஞனாக அவன் இருந்தான். கிராமத்தில் தன்னை ஒரு பெரிய தத்துவவாதியாகக் காட்டிக்கொண்டான். அவனுக்கு ஒப்பான வயதினரை வம்புக்கு இழுத்தான். புத்தக அறிவை விடுத்துச் செயல் வீரனாக மாறும் பொருட்டு அவன் தன்னை ஹிட்லரின் படையில் சேர்த்துக்கொண்டு போர்முனைக்கு அனுப்புமாறு கோரினான். சில காலம் கழித்து வீட்டுக்குத் திரும்பினான். திருமணம் செய்துகொள்ள. போர்முனையில் பட்ட கஷ்டங்களிலிருந்து விடுதலை பெற அவன் அப்போது வழக்கத்திலிருந்த ஒரு மேஜிக் ஃபார்முலாவை உபயோகித்தான். அந்த மேஜிக் பார் முலாவின் பெயர்: திருமணத்துக்கான விடுப்பு!*

என் பாட்டனார் அவருடைய மேஜை இழுப்பறையில் இரண்டு புகைப்படங்களை வைத்திருந்தார். ஒன்று திருமணப் புகைப்படம். மற்றொன்று சாவு சார்ந்தது. திருமணப் புகைப்படத்தில் வெள்ளை உடையில் கணவனை விட உயரமாக அவன் கையைக் கோர்த்துக் கொண்டு மணப்பெண் நின்றாள். பிளாஸ்டர் மடோன்னா. அவள் தலையைச் சுற்றி உறைபனியினால் மூடப்பட்ட இலைகளைப் போல ஒரு மெழுகு மாலை. அவளை ஒட்டி நாஸி சீருடையில் ஒரு போர்வீரனாக மாட்ஸ். அவன் மணப்பெண்ணின் பாதுகாவலனைப் போல் நின்றான். மணமகனாக அல்ல, அவன் மறுபடியும் போர்முனைக்குச் சென்ற உடனேயே சாவுப் புகைப்படம் வந்துவிட்டது. கையகலப் புகைப்படத்தில் கறுப்பு நிற பூமி மீது வெள்ளைத் துணி போர்த்தப்பட்ட குவியலில் அவன் உடலும் இருந்தது. கறுப்பு நிற வயலில் அந்த வெள்ளைத்துணி ஒரு சிறு குழந்தையின் கைக்குட்டை போலக் காணப்பட்டது. என் பாட்டி அவளுடைய இறுதிக் காலம் வரை தன்னுடைய வழிபாட்டுப் புஸ்தகத்தில் இந்தப் புகைப்படத்தை வைத்திருந்தாள். அவள் தினமும் பிரார்த்தனை செய்தாள். அவளது பிராத்தனைக்கு இரண்டு அர்த்தங்கள் நிச்சயமாக இருந்தன. அவளுடைய நேசத்துக்குரிய மகன் மற்றும் நாஸி இயக்கத்துக்குச் சென்றவன். அவர்கள் கடவுளிடம் அவள் தன் மகனை நேசிக்கவும், நாஸியாக அவன் இருந்ததை மன்னிக்கவும் வேண்டியிருந்திருப்பார்கள்.

முதல் உலகப் போரில் என் பாட்டனார் ஒரு சிப்பாயாக இருந்தார். அவர் தன் மகனைப் பற்றி மனக்கசப்போடு பேசியது என்னவென்று உணர்ந்துதான் பேசியிருப்பார்: படைகள் பின்வாங்கும் போது வெற்றி முரசு படுகுழியில் விழுந்து விடுகிறது. இந்த எச்சரிக்கை நான் பின்னால் அனுபவித்த சர்வாதிகாரப் போக்குக்கும் பொருந்தியது.

சிறு வயதில் நான் அக்கார்டியன் என்னும் இசைக் கருவியை என் விருப்பத்துக்கு மாறாகப் பயின்றேன். ஏனென்றால் இறந்து விட்ட மார்ட்ஸின் சிவப்பு நிற அக்கார்டியன் எங்கள் வீட்டில் இருந்தது. அந்தக் கருவியின் வார்கள் மிக நீளமாக இருந்தன. அவை என் தோளிலிருந்து நழுவி விடக் கூடாதென்று என் ஆசிரியை அவற்றை என் முதுகுக்குப் பின்னால் இழுத்துக் கட்டி விடுவார். ஒரு கைக்குட்டையை வைத்து. உலகில் சின்னஞ் சிறு பொருள்கள் - ஊதுகுழல்களோ, அக்கார்டியன்களோ , கைக்குட்டைகளோ - வாழ்க்கையில் முக்கியத்துவம் பெற்று விடுகின்றன என்று சொல்லலாமா? அவை பரந்த வெளியில் நடமாடுகின்றன. அவைகளின் பிறழ்நிலை திரும்பத் திரும்ப வெளிப்படும் ஒரு அமைப்பைக் கொண்டுள்ளன, ஒரு மாயச் சுழல் என. அதை நாங்கள் ஜெர்மன் மொழியில் சாத்தானின் வட்டம் என்போம். நாங்கள் அதை நம்பலாம். ஆனால், வெளியில் சொல்ல முடியாது. அப்படியும் சொல்ல முடியாததை எழுத்தில் கொண்டு வந்துவிடலாம். ஏனெனில் எழுத்து என்பது ஒரு நிசப்தமான செயல். தலையிலிருந்து கைக்குச் செல்வது. வாய்க்கு அங்கு இடமில்லை. நான் சர்வாதிகாரத்தைப் பற்றி எவ்வளவோ சொன்னேன். தப்பட்டைப் பறையை வைத்துச் செய்ய வேண்டாமென்று. வழக்கமாக என் பேச்சு வேதனையைத் தரும் விளைவுகளைக் கொண்டதாயிருந்தது. ஆனால், எழுத்து நிசப்தத்தில் ஆரம்பித்தது. படிக்கட்டுகளில். அங்கே சொல்ல முடிவதற்கும் மேலே எனக்குத் திருப்தியைத் தரும் வழி இருந்தது. என்ன நடந்ததோ அதைப் பேச்சாக ஆக்க முடியவில்லை. சுற்றி இருந்தவற்றை வேண்டுமெனில் கூற முடிந்திருக்கும். ஆனால், என் முழு அனுபவத்தையும் கொண்டு வர இயலாது. அதை நான் என் தலையில், வார்த்தைகளின் மாயச் சூழலுக்குஇடையே வார்த்தைகளாகக் கொண்டு வந்து எழுதினேன். வாழ்வின் மீதான தாகமும் அச்சமும் என்னை இயக்கின. வார்த்தைகளுக்கான ஒரு பசி. என் நிலைமையை என் வார்த்தைகள் புரிந்துகொண்டு இயங்கின. வாய்மொழியாக வர முடியாததை எழுத்து ஈடு செய்தது. என் அநுபவங்களைத் தெரிவிக்க வார்தைகளைத் தேடிச் சென்ற போது நான் இதற்கு முன்பு கண்டிராத சுழற்சியில் தள்ளப்பட்டேன். அத்தகைய அனுபவம் இதற்கு முன்பு எனக்கு நேர்ந்திராத ஒன்று.

நடப்பின் இயல்புக்கு இணைந்து நடனமாடிய வார்த்தைகள் அவை இஷ்டத்துக்கு ஆட்டம் போட்டன. மிக முக்கியமானவற்றை விரித்துச் சொல்வதற்குப் பதிலாகச் சுருக்கியும் சில்லறை விஷயங்களைப் பெருக்கியும் காட்டின. அவை பித்துப் பிடித்து வேகமாகச் சென்ற போது மாயச் சுழலான வார்த்தைகள் உண்மையின் மீது திரை போட்டு நின்றன. அவைகளின் அபிநய நாட்டியம் குரூரமாகவும் அமைதியற்றும் இருந்ததோடு தடுமாற்றத்துடன் தத்தளித்தது. நமது உரிமைகள் பறிக்கப்பட்டு விட்ட பிறகு சர்வாதிகாரம்தான் நம்மைச் சூழ்ந்திருக்கிறது. அதன் நடமாட்டம் எப்போதும் உள்ளடங்கி இருந்தாலும், வார்த்தைகள்தான் என் மீது ஆட்சி செலுத்துகின்றன. அவை வசீகரம் மிகுந்தவை. அவை உண்மையைத் தாங்கி நிற்பதால், வேறு எதைப் பற்றியும் கவலைப்பட வேண்டியதில்லை.

நான் படிகளில் அமர்ந்து வேடிக்கைப் பொருளாகக் காட்சியளித்தபோது என்னை நான் நதிப் பள்ளத்தாக்கில் பசுக்களைப் பராமரித்த சிறுமியைப் போலத் தனிமையானவளாக உணர்ந்தேன். இலைகளையும் தழைகளையும் தின்று எப்படி உயிர் வாழ்வது என்று அவைகளுக்குத் தெரிந்தது, எனக்குத் தெரியவில்லை. இலைகளையும் தழைகளையும் நான் தின்றேன். நெருஞ்சில் செடியைப் பெயர் சொல்லி அழைத்தேன். ஆனால், அந்தச் செடியோ காது கொடுத்துக் கேட்கவில்லை. அதனால் நான் புதுப் பெயர்களைக் கண்டுபிடித்தேன்: முள் எலும்பு,




ஊசிக் கழுத்து இந்தப் புதிய பெயர்கள் எனக்கும் செடிகளுக்குமிடையே ஆழமான இடைவெளியை ஏற்படுத்தி விட்டது: செடிகளுடன் பேசாமல் எனக்குள்ளேயே பேசிக்கொள்கிறேன் என்னும் குற்றச்சாட்டை. அதுவும் ஒரு விதத்தில் நல்லதாகப் போய்விட்டது. நான் பசுக்களைப் பராமரிக்கையில் வார்த்தை ஒலிகள் என்னைப் பராமரித்தன. நான் உணர்ந்தேன்:

உன் வசம் உள்ள வார்த்தை ஒவ்வொன்றும்
மாயச் சுழலை அறிந்திருக்கிறது.
ஆனால், அதைச் சொல்வதில்லை.

வார்த்தைகளின் ஒலி ஏமாற்றுவதைத் தவிர தனக்கு வேறு வழி இல்லை என்று அறிந்திருக்கிறது. பொருள்கள் தமது உண்மைத்தன்மையை வெளிப்படுத்துவதில்லை. உணர்ச்சிகள் தமது சைகைகள் மூலம் நம்மைத் தவறான வழியில் நடத்திச் செல்லுகின்றன. ஏமாற்றுகின்றன. நம்பகத் தன்மையை ஏற்படுத்தாத பொருள்களும் ஏமாற்றுவதில் குறியாயிருக்கும் உணர்ச்சிகளும் சேரும் இடத்தில் வார்த்தைகளின் ஒலி, தான் கண்டுபிடித்து வைத்திருக்கும் சத்தியத்தை எடுத்துச் சென்று தங்குகிறது. எழுத்தில், நம்பிக்கை அல்ல, கபடதாரியின் நேர்மைதான் பொருட்படுத்தப்பட வேண்டியது.

முன்பு தொழிற்சாலை படிக்கட்டு வேடிக்கைப் பெண்ணாக இருந்து, என் கைக்குட்டையை அலுவலமாக மாற்றியிருந்த நாள்களில் ஏறுமுக வட்டி விகிதம் என்னும் அழகிய வார்த்தையைப் பார்த்தேன். ஒரு கடன் மீது வட்டி விகிதம் அதிகரிக்கும் போது அது படிக்கட்டில் ஏறுவதைப் போல இருக்கிறது. (ஜெர்மன் மொழியில் இது 'படிக்கட்டு வட்டி' என்று அழைக்கப்படுகிறது) இந்த ஏறுமுக விகிதம் ஒருவருக்கு செலவு. இன்னொருவருக்கு வரவு.

எழுத்தில் நான் ஆழ்ந்திருக்கும் போது கவனிக்கிறேன்: எழுத்து என்னிடமிருந்து எடுப்பதை வாழ்வின் அனுபவம் இழக்கிறது. எழுத்துதான் இந்தக் கண்டுபிடிப்பைச் செய்கிறது, மேற் சொன்ன தாத்பர்யத்தை உணராமலே.வாழ்க்கை அனுபவத்தை சிக்கென அது பிடிக்கும் போது அந்த வெளிப்பாடு சிறப்பாக இருக்கிறது. இறுதியில் வாழ்வனுபவம் எழுத்தை அணைத்துக்கொள்வது தடுமாறி விழுந்து விடாமல் இருக்கத்தான்.

எனக்கென்னவோ பொருள்கள் தம்மை முற்றாக அறிவதில்லை; சைகைகள் உணர்ச்சிகளை அறிந்துகொள்வதில்லை; வார்த்தைகள் வாய் சொல்வதை அறிவதில்லை. ஆனால், நமது இருப்பின் நிச்சயத்தை உணர, நமக்குப் பொருள்களும் சைகைகளும் வார்த்தைகளும் வேண்டியிருக்கின்றன. நாம் எவ்வளவு அதிகமாக வார்த்தைகளை நம்பியிருக்கிறோமோ அந்த அளவிற்குச் சுதந்திரம் பெற்றிருக்கிறோம்.நமதுபேச்சுதடைசெய்யப்பட்டால், நாம் சைகளையும் பொருள்களையும்தான் நம்பிக் காலம் தள்ள வேண்டும். அப்போதும் அவை நாம் சொல்ல விரும்புவதை சரியாக முழுமையாக வெளிப்படுத்தாதது மட்டுமின்றி அதிக நேரத்தை எடுத்துக்கொள்கின்றன. இந்தச் சூழ்நிலை பல சந்தேகங்களை ஏற்படுத்தும் சாத்தியமும் இருக்கின்றது. வார்த்தைகள் நமக்கு ஏற்படும் ஏதாவதொரு தலைகுனிவை, அவமானத்தை நிவர்த்தி செய்து நம்மைக் கௌரவமான நிலைக்கு எடுத்துச் செல்லும் வல்லமை பெற்றவைகளாக இருக்கின்றன.

நான் ரொமேனியாவிலிருந்து வெளியேறுவதற்கு முன்பு ஒரு நாள் காலை என் அம்மாவைத் தேடி ஒரு காவலர் வந்தார். அவள் அப்போது கேட்டருகே நின்றிருந்தாள். திடீரென்று அவளுக்குத் தன்னிடம் கைக்குட்டை இல்லை என்ற நினைவு ஏற்பட்டு வீட்டுக்குள் சென்றாள். காவலர் சற்றுப் பொறுமை இழந்தவராகக் காணப்பட்ட போதிலும். போலீஸ் ஸ்டேஷனில் அந்தக் காவலர் என் அம்மாவைப் பார்த்துக் கூச்சலிட்டார். என் அம்மாவுக்கு ரொமானிய மொழி அதிகமாகப் பயிற்சி இல்லாதிருந்த நிலையில் அந்த மனிதர் எதற்காகக் கத்துகிறார் என்று புரியவில்லை. கோபம் மிகுந்த நிலையில் அந்தக் காவலர் என் அம்மாவை அந்த நிலைய அலுவலகத்தில் வைத்து கதவைத் தாழிட்டு விட்டு வெளியே சென்றுவிட்டார். முழு நாளும் என் அம்மா அங்கே காவலில் இருந்தாள். ஆரம்பத்தில் அழுதபடி

(தொடர்ச்சி 33ஆம் பக்கம்)

## சரவணன் மாணிக்கவாசகம்

# அவரவர் உணர்ந்த யானை அவரவருக்கு

### நேர்கண்டவர்: கருணாகரன்

“மதுரையில் பிறந்து, முதல் கால்நூற்றாண்டு அங்கேயே வாழ்ந்தவன். எண்பதுகளில் மதுரையில் இலக்கிய தாகம் கொண்டவர் நிறையப் பேர் இருந்தார்கள். ஆங்கில வாசிப்பு ஒரு தோழியிடம் இருந்து தொற்றிக்கொண்டது. முதலில் Chase, Perry Mason books கல்லூரிக்குச் சென்ற பிறகே ஆங்கிலத்தில் Classics ஆரம்பித்தேன். இருபது வருடங்கள் வங்கிப் பணியில் இந்தியாவின் பல நகரங்களில் வசித்திருக்கிறேன். மனைவி +2விற்கு இயற்பியல் கற்பிப்பவர். அவரும் ஒரே மகளும் என்னுடன் எல்லா இடங்களுக்கும் வந்தனர். பின்னர் பத்து வருடங்கள் கார்ப்பரேட் குழுமம் ஒன்றின் CFO. மனைவி பெங்களூர் பள்ளியில் தொடர்கிறார். மகள் மணமாகி நெதர்லாந்தில் வசிக்கிறார். இப்போது நானும் புத்தகங்களும்” என்று சொல்லும் சரவணன் மாணிக்கவாசகம், 40 ஆண்டுகளாகத் தொடர்ந்து உலக இலக்கியங்களைப் படித்து வருகிறார். ஆங்கிலத்திலும் தமிழிலும் வருகின்ற புதிய நூல்களைத் தேடிப் படித்து, அதைப் பற்றிய அறிமுகங்களைச் செய்கிறார். இதன்வழியே சமகால இலக்கிய வரவுகளையும் அதன் போக்கையும் சுருக்கமாக வெளிப்படுத்தும் பணி முன்னெடுக்கப்படுகிறது, புத்தகங்களைக் கொண்டாடும் முதன்மையான வாசகராக இருக்கும் சரவணன் மாணிக்கவாசகத்துடன் இணைய வழியில் செய்யப்பட்ட நேர்காணல் இது.



**இலக்கிய வாசிப்பில் நீங்கள் இந்தளவுக்குப் பேரார்வமாக இருப்பது எதற்காக? அதனால் ஏற்படுகின்ற நன்மைகள்?**

இலக்கியம் என்று சுருக்குவதை விட, வாசிப்பு வாழ்க்கையில் ஒரு பகுதியாகவே மாறிவிட்டது. வாசிக்காமல் இருந்த நாட்கள் என் நினைவிலில்லை. வங்கி வேலையில் அனுதினம் பன்னிரண்டு மணிநேரங்களுக்கு மேல் வேலைசெய்யும் நிர்பந்தத்திலும் கூட நாளின் இடையில் அல்லது தூக்கத்திலிருந்து வாசிப்பிற்கான நேரத்தை என்னால் திருட முடிந்திருக்கிறது. வாசிப்பு என் வரையில் ஒரு போதை. பக்க விளைவுகளில்லாத போதை. வாசிப்பு என்பது பிறர் மத்தியில் நம்மை உயர்வாகக் காட்டிக்கொள்வது என்ற பிரமையை விடுத்து வாசிப்பு என்பது சுய மகிழ்ச்சிக்காக என்ற புரிதல் வந்தால் வாசிப்பின் மீதான பேரார்வம் எப்போதுமே வற்றாது இருக்கும்.

தொடர்வாசிப்பு மனச் சமநிலையைக் கொடுக்கும். நமக்கு நடப்பவற்றையே, நம்மை பார்வையாளனாக்கி நம் காட்சிக்கோணத்தில் ஓட விடும். நல்லதோ கெட்டதோ அதனால் வரும் பாதிப்புகளைக் குறைக்கும். மன அழுத்தத்தைக் குறைக்கும். தனிமை என்ற பேச்சுக்கே இடமில்லை. எல்லாவற்றையும் விட முக்கியமாக தர்க்க மனநிலையைக் கொண்டு வந்து சேர்க்கும்.



இவர் செய்தார்; எனவே சரி என்ற திரிபுகளிலிருந்து இது சரி அல்லது தவறு என்ற விடைகளைக் கொடுக்கும். இதனால் நமது முடிவுகள் எல்லாமே எல்லா நேரங்களிலும் சரியாகவே இருக்கும் என்று சொல்வதற்கில்லை. ஆனால், சார்புநிலையற்றமுடிவை நாம் எடுத்திருக்கிறோம் என்பதை அறுதியிட்டுச் சொல்ல முடியும். வாசிப்பு அதற்கு வழிவகுக்கும்.

அப்படியென்றால் வாசிப்பினால் மகிழ்ச்சியோடு வாழ்க்கைக்கான அறிவும் மேம்படுகிறது. சமநிலை கொள்ளும் உளப் பண்பாடொன்றும் உருவாகிறது எனலாமா?

ஆமாம். வளர்ச்சி ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு விதத்தில் அகத்தில் நேரும். விகிதாச்சாரம் மாறலாம் ஆனால், தொடர் வாசிப்பாளருக்கும் வாசிப்பே இல்லாதவருக்கும் வேறுபாடு இருந்தே தீரும்.

இந்த ஆர்வம் எப்படி ஏற்பட்டது?

என் அம்மாவிடம் இருந்துதான் வாசிப்புப் பழக்கம் தொற்றிக்கொண்டது. ஐந்து வயதில் ஆரம்பித்திருப்பேன். அம்மாவிற்கு அப்போது புத்தகங்கள் போதுமானவையாக இருந்ததில்லை. அடுத்து பத்திரிகைகளோ நூலகத்தில் இருந்து புத்தகங்களோ வரும்வரை, வாசித்ததைப் புரட்டிக் கொண்டிருப்பார். கோகுலம், அம்புலிமாமா அடுத்த இதழ் வரும்வரை நான் எத்தனைமுறை அதையே வாசிப்பது. குமுதம், ராணி போன்ற பத்திரிகைகளை நான் பாதி புரிந்தும் புரியாதும் வாசிக்கையில் அம்மாவின் பார்வையில் சிறுசஞ்சலத்தைக் கவனித்திருக்கிறேன். அதுவே ஆர்வத்தின் ஆரம்பப் புள்ளியாக இருந்திருக்கக்கூடும். விலக்கப்பட்ட கனியின் மீதான விருப்பு.

இடையில் குடும்பம், பணிச்சுமை போன்ற

காரணங்களால் இது தடைப்படவோ குறையவோ இல்லையா?

அவ்வப்போது குறைந்திருக்கிறது ஆயின் எப்போதுமே தடைப்பட்டதில்லை.

**தினமும் எவ்வளவு நேரம் வாசிப்பீங்க? உங்களுடைய வாசிப்பு முறை எப்படியானது அல்லது எப்படி அதை வைச்சிருக்கிறீங்கள்?**

அப்படிக் குறிப்பிட்டு சொல்வதற்கில்லை. அந்தந்த தினத்தைப் பொறுத்தது. பன்னிரண்டு மணிநேரம் வாசிக்கும் நாட்களும் உண்டு, ஒரு மணிநேரமே வாசிக்கக் கிடைக்கும் நாளுமுண்டு. ஒரு செவ்வியல் நூலை வாசித்தால் அடுத்த செவ்வியல் நூலை உடனே எடுப்பதில்லை. ஓரிரு நாட்களேனும் இடைவெளிவிட்டு, அந்த இடைவெளியில் திரில்லர்கள் போல் சுலப வாசிப்பை எடுத்துக்கொள்வேன். ஆனால், திரில்லர்கள் பத்து நூல்கள் கூட இடைவெளியின்றித் தொடர்ந்து படிக்கலாம்.

**ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக வாசித்துக் கொண்டிருக்கிறீங்கள். இதற்குள் உலகளாவிய அளவிலும் தமிழ்ச் சூழலிலும் ஏற்பட்டுள்ள மாற்றங்கள், வகைப்பாடுகள்?**

உலக இலக்கியத்தில் நாவல் வடிவம் நேரடியாக ஒரு பெருங்கதையைச் சொல்வதிலிருந்து பல வடிவ மாற்றங்களை அடைந்திருக்கின்றது. சமீபத்தில் வெளிவந்த, ஓல்கா ராவ்ன் எழுதிய ‘தி எம்ப்ளாய்ஸ்’ (Olga Ravn - The Employees) நாவல் முழுவதும் பணியாளர்களின் நூறு Statements. சுசன்னா கிளார்க் எழுதிய ‘பிரனேசி’ (Susanna Clarke - Piranesi) முழுக்கவே allegorical structures கொண்ட நாவல். அதே நேரத்தில் தாய் - மகள் உறவைக் கூறும் நாவல் ஒன்றேனும் புக்கரில் சமீபகாலகளில் வந்துவிடுகிறது. சுயசரிதைக்கூறு கொண்ட நாவல்கள் வருகின்றன. பழைய புராணக்கதைகளின் மீட்டுருவாக்கம் Modern fable ஆக வருகின்றன. இன்னும் எத்தனையோ வடிவ மாற்றங்கள். அதைப் பார்க்கையில் தமிழில் நாவல்கள் நெடுந்தூரம் பயணம் செய்வதாய் நினைத்து, செக்குமாடு வட்டத்திற்குள்ளேயே சுழல்கின்றன. ஒரு அல்புனைவுக்காக ஒரு ஆயுளின் பெரும்பகுதியை மேலைநாட்டினர் செலவழிக்கையில், இங்கே கூகுள் தகவல்களைக் கோர்த்து ஒரு வாரத்திற்குள் முடித்து விடுகிறார்கள்.

கவிதைகள், சிறுகதைகளில் நாம் உலக இலக்கியத்தோடு சேர்ந்தே பயணிக்கிறோம். அதைத் தனியாகப் பார்ப்போம்.

**தமிழில் நாவலின் போதாமையைப் பற்றி ஜெயமோகன் 1990களில் ‘நாவல்’ என்ற கோட்பாட்டு நூலை எழுதி, அதைப்பற்றிப் பெரிய விவாதமே நடந்தது. தன்வரலாற்று நாவல்களாகத் தமிழிலும் ராஜ் கௌதமனின் ‘சிலுவைராஜ் சரித்திரம்’, ‘காலச்சுமை’, யூமா வாசுகியின் ‘ரத்த உறவு’, பாமாவின் ‘கருக்கு’, பிரியா விஜயராகவனின் ‘அற்றவைகளால் நிரம்பியவள்’, அழகிய பெரிய நாயகி அம்மாளின் ‘கவலை’ எனப் பல வந்துள்ளனவே! புராணக்கதைகளின் மீட்டுருவாக்கமாக எஸ்.ரமகிருஸ்ணனினின் ‘உப பாண்டவம்’, ஜெயமோகனின் ‘வெண்முரசு’ என வந்திருக்கின்றன. இவை பற்றிய உங்களுடைய பார்வை?**

தமிழில் நாவலில் போதாமை இருக்கிறது என்பது உண்மை. வண்ணநிலவனும் சமீபத்தில் கூறியிருக்கிறார். ஆனால், அவர் சில மாஸ்டர்களின் பெயரைக் குறிப்பிட்டு எழுதியது விவாதத்திற்குரியது. தி.ஜாவின் ‘மலர்மஞ்சம்’ வெளியாகுவதற்கு நூறு வருடங்கள் முன்பே Wuthering Heights வெளியாகி விட்டது. அதில் Cathy ஆன்மாவிற்கு ஒருவன், வசதி வாய்ப்புக்கு ஒருவன் என்று இருவரையும் காதலிப்பாள். நூறு வருடங்கள் கழித்துப் பாலியால் அதைச் செய்ய முடியவில்லையே. டிக்கன்ஸ் எத்தனை வகைகளில் நாவல்கள் எழுதியிருக்கிறார். ‘அற்றவைகளால் நிரம்பியவள்’, ‘ரத்தஉறவு’, ‘கருக்கு’, ‘சி.சரித்திரம்’ எல்லாமே நல்ல நாவல்கள். ஆனால், அனுபவக் கதைகளுடன் நாவலுலகம் முடிவதில்லையே. ‘இரண்டாம் இடம்’, ‘யுகாந்தா’, ‘பருவம்’ ஆகியவற்றுடன் ஒப்பிடுகையில் உபபாண்டவத்தை எங்கே வைப்பீர்கள். ‘வெண்முரசு’ குறித்து எனக்குப் பெரிதாக அபிப்ராயம் ஏதுமில்லை.

**இலக்கியத்துக்கு காலப் பகுப்பு எழுத்திலும் வாசிப்பிலும் - உண்டா? ஏனென்றால், பல்கலைக்கழக ஆய்வுகளில் காலத்தை ஒரு எல்லையாக வைத்து இலக்கியத்தைப் பார்க்கின்ற போக்குண்டு. 1990க்குப் பிறகு, 2000க்கு முன் அல்லது 2000க்குப் பின் என்ற மாதிரி. இதை ஏற்றுக்கொள்ளலாமா?**

ஆங்கிலத்தில் Middle English, Victorian Era என்று விமர்சகர்கள், சமூக மாற்றங்கள், உலகப் போர்கள் போன்ற முக்கிய நிகழ்வுகளின் பாதிப்புகள் இலக்கியத்தின் மேல் ஏற்படுத்திய பாதிப்புகளை இந்தக் காலப்பகுப்புகள் கவனிக்க உதவின. எழுபதுகளின் ஆரம்பத்தில் பெண்ணியம் அமெரிக்காவில் எழுச்சியடைந்தது, அதனைத் தொடர்ந்து ஏராளமான பெண் எழுத்தாளர்கள் எழுத வந்தார்கள். இந்தியா போன்ற நாட்டில் என்ன நடந்தது? பளிச்சென்று தாவணி உடுத்தியிருந்த பெண், நரைகூடி, கிழப்பருவம் எய்தியது மட்டுமே நடந்தது. வேண்டுமென்றால் ஈழ இலக்கியத்தில் போருக்கு முன், பின் எனக் காலப்பகுப்பு செய்யலாம்.

**இலக்கியப் பிரதிகளுக்கு அப்பால் இலக்கிய விமர்சனம், இலக்கியக்கோட்பாடு போன்றவற்றில் உங்களுடைய ஆர்வம்?**



வாசித்தவற்றில் பெரிதும் கவர்ந்தவற்றைக் குறித்த சிறுகுறிப்புகளை நண்பர் வட்டாரத்திற்கு அனுப்புவேன். அதில் தோழர் ஆர்.பி. ராஜநாயஹம் பிடிவாதமாக முகநூலில் பதியச் சொல்லி மாதக்கணக்கில் கூறிக்கொண்டே இருந்தார். தயக்கத்துடனேயே முகநூல் வந்தேன். இப்போது புலிவாலைப் பிடித்த கதை ஆயிற்று. என்னுடைய விமர்சனம்,ரசனை+திறனாய்வுக்கூறுகளைச்சுருக்கித் தருவது. அதனை அறிமுகக் குறிப்பு, பின்னட்டைக் குறிப்பு என்றெல்லாம் சொல்கிறார்கள். அவரவர் உணர்ந்த யானை அவரவருக்கு.

நாவல்,சிறுகதை,கவிதை என்பதற்கு அப்பால் இலக்கிய விமர்சனம், இலக்கியக் கோட்பாடு சார்ந்த வாசிப்பார்வம்?

ஆங்கிலத்தில் தொடர்ந்து வாசிக்கிறேன். தமிழில் பெரும்பாலான விமர்சனங்கள் கதைசொல்லியாகவோ அல்லது ரசனை அடிப்படையிலோ இல்லை. திறனாய்வு என்ற பெயரில் மிதிவண்டியை Overhaul செய்ய எல்லா பாகங்களையும் கழட்டி எண்ணெயில் ஊற வைப்பதால் அவற்றைத் தவிர்க்கிறேன்.

இதற்கெல்லாம் அப்பால் உங்களுடைய வாசிப்பு? சினிமா, ஓவியம், நாடகம், பயணம் போன்றவற்றில் ஆர்வம்?

சினிமா, நாடகம் ஆகியவற்றில் ஆர்வம் உண்டு. வாசிப்பைப் பாதிக்காத வகையில் வெகுமுக்கியம் என்பனவற்றைப் பார்த்துவிடுவேன். பயணம் இன்னும் பிறநாடுகளுக்கு நிறையவே செல்லவேண்டியிருக்கிறது. ஓவியம் குறித்து அரிச்சுவடி கூட எனக்குத் தெரியாது.

வாசிப்பின்போது ஏற்படுகின்ற மகிழ்ச்சி, நிறைவு, கொண்டாட்டத்தைப் போல சலிப்பு அல்லது எரிச்சல் போன்றவையும் ஏற்படும் அல்லவா?

பொதுவாகவே எனக்கு நல்ல கனத்தத்தோல். நிஜவாழ்க்கை நிகழ்வுகளே என்னை அதிகம் எதிர்வினை செய்ய வைப்பதில்லை. ஆனால், நீங்கள் சொல்வது உண்மை. நாம் முனைப்பாக வாசிக்கையில் பலவித உணர்ச்சிகளும் வந்து போவதைத் தவிர்ப்பதற்கில்லை. ஆனால், அது என்னிடம் தங்கும் நேரம் ஒப்பீட்டளவில் குறைவு.

தமிழில் நாவல், கவிதை போன்றவற்றை விடச் சிறுகதைகள் உலகளாவிய தரத்தில் உண்டென்றொரு அபிப்பிராயம் உண்டு. நீங்களும் அப்படிச்சொல்லியிருக்கிறீங்க. இதற்கு ஆதாரமாக உங்கள் தரப்பிலிருந்து சொல்லக் கூடிய கதைகள், எழுத்தாளர்கள்? எப்படிச் சிறுகதையில் மட்டும் இது நிகழ்ந்திருக்கிறது?

புதுமைப்பித்தனில் ஆரம்பித்த சிறுகதை பின் திரும்பிப் பார்க்கவேயில்லை. இன்றளவும் 'மகாமசானம்' வாசிக்க எவ்வளவு புதிது போல் இருக்கிறது. பு.பி மட்டுமல்ல தமிழில் ந.பிச்சமூர்த்தி, கு.ப.ரா, தி.ஜா, கு.அழகிரிசாமி என்று எத்தனையோ ஜாம்பவான்கள். இவர்களை வாசித்து வளர்ந்தவர்கள் இவர்களின் நீட்சியாகப் போனார்கள். சமீபத்தில் லதா எழுதிய 'இளவெய்யில்' கதையும் 'Yellow wall paper' கதையும் ஒரே கரு. ஆனால், இரண்டும் வெவ்வேறு காலகட்டத்தின், நாகரீகத்தின், பின்புலத்தின் இரு பெண்களின் கதைகளைச் சொல்கின்றன. ஜெயமோகனின் 'யானம்' தற்கால இந்திய திருமண அமைப்பை விமர்சிக்கிறது. நல்ல கதைகள் அவ்வப்போது தமிழில் வந்துகொண்டு தான் இருக்கின்றன, ஆனால், ஒரு நல்ல கதையைப் கண்டுபிடிக்க ஐம்பது சராசரிக்குக்கீழான கதைகளை வாசிக்க வேண்டியதாகிறது. ஆங்கிலத்தில் இது அதிகம் நேர்வதில்லை.

மரபிலக்கியம், நவீன இலக்கியம், பின் நவீன இலக்கியம், நவீனத்தைக் கடந்த இலக்கியம் என கடந்த 70 ஆண்டுகளுக்குள் பெரிய அளவில் ஒரு மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. இதை நீங்கள் எப்படிப் பார்க்கிறீங்கள்? இன்னும் செல்வாக்கோடுள்ள போக்கு?

காஃப்காவின் Metamorphosis மாய யதார்த்தமா இல்லை அபத்தவாதமா? நாம் நம் தரப்பு நியாயங்களை விவாதித்துக்கொண்டே இருக்கலாம். ஆனால், நாவல்

உலகில் அது ஒரு மைல்கல் என்பது மட்டும் உண்மை. இஸங்கள், கோட்பாடுகள், யுத்திகள் வரும், போகும். நல்ல இலக்கியம் நிலைத்து நிற்கும். எப்போதும் செல்வாக்கோடு இருப்பது, இருக்கப்போவது யதார்த்தவாதம். அதனுடன் நம் வாழ்க்கை நெருக்கமாகப் பின்னிப் பிணைந்திருப்பதால் அதை நம் வாழ்வின் கண்ணாடியாகப் பார்க்கிறோம்.

**ஆனால், யதாத்தவாதத்தில் உள்ளதை விட பின்நவீனச் சிந்தனையும் நவீனத்தைக் கடந்த நிலையும் புதிய வாழ்க்கையை, புதிய பண்பாட்டு விரிவுகளை, உலகளாவிய அளவில் ஏற்பட்டு வரும் அரசியல், பொருளாதார மாற்றங்களை உள்ளடக்கிப் பேசுவதுடன், புதிய பால் நிலை உறவுகளையும் விளிம்பு மனிதர்களையும் வெளிப்படுத்துகின்றனவே!**

உண்மை. மாஜிக்கல் ரியலிசத்தை மட்டும் எடுத்துக்கொண்டால், அது உண்மையை வேறுவிதத்தில் அழுத்திச் சொல்ல உபயோகப்படுவது. ‘மகனைக் கொலை செய்து விடுகிறார்கள். அவன் இருக்கும் மாடியிலிருந்து ரத்தம் கதவுக்கு வெளியே சென்று தெருக்களைக் கடந்து அவன் தாய் வசிக்கும் வீட்டிற்குச் செல்லும். அதைப் பார்த்ததும் அவன் தாய்க்குத் தெரிந்துவிடும்‘ இது மார்க்வெஸ். இதை யதார்த்தத்தில் சொன்னால் ஒன்று தொனி குறைவாக அல்லது உயர்வு நவிற்சியாகப் போய்விடும். நான் சொல்வது என்னவென்றால் மாறிக்கொண்டே இருக்கும் இலக்கியத்தில் யதார்த்தவாதத்திற்கு நிரந்தர இடம் உண்டு என்பதே.

**உலகளாவிய அளவில் வேகமாக நடந்திருக்கும் - நடந்து கொண்டிருக்கும் அறிவியல், அரசியல், பண்பாட்டு, பொருளாதார, தொழில் நுட்ப மாற்றங்களோடு உண்டான அல்லது இவை உண்டாக்கிய தாக்கங்கள் இலக்கியத்திலும் நிகழ்ந்துள்ளதல்லவா? இதை நீங்கள் எப்படிப் பார்க்கிறீர்கள்? ஒரு வாசகருக்கு இந்த மாற்றங்கள் எத்தகைய அவதானங்களை உண்டாக்குகின்றன?**

நல்ல கேள்வி இது.

வங்கி மேலாளருக்கு அனைத்தைக் குறித்தும் A to D வரையாவது தெரிந்திருக்க வேண்டும் என்பார்கள். அது போல் ஒரு இலக்கிய வாசகனுக்கு நீங்கள் மேற்கூறிய விஷயங்களின் தாக்கங்கள் இலக்கியத்தில் எழுவதைப் புரிந்துகொள்ள அடிப்படையாகவேனும் தெரிந்துகொள்ள வேண்டும். லத்தீன் அமெரிக்காவில் என்ன நடந்தது என்று தெரியாமல் இஸபெல் அலெண்டேயை எவ்வாறு வாசிப்பது?

புக்கர் இன்டர்னேஷனில் இடம்பெறும் நூல்கள் அந்தந்த நாட்டின் அடிப்படைச் சிக்கல்களை மையமாகக் கொண்டு வர ஆரம்பித்திருக்கின்றன. அவை குறித்த புரிதலின்றி அதை இரசிப்பது கடினம். ஆண்-பெண் உறவும் ஆங்கிலமும் தெரிந்தால் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இலக்கியங்களைப் படிக்கலாம் என்றிருந்த காலம் மலையேறிவிட்டது. இலக்கிய வாசகன் தொடர்ந்து தன்னை மேம்படுத்திக்கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுள்ளது.

**தமிழிலக்கியத்தின் தற்காலச் சூழல் (நிலவரம்)?**

தமிழிலக்கியத்தின் தற்காலச்சூழல் குழுக்களில் பிரிந்து இருக்கிறது. அவரவர் குழுவின் பங்களிப்புகளைத் தன்குஞ்சு பொன்குஞ்சு என்ற மனநிலையில் பார்த்துக்கொள்கிறார்கள். உதாரணத்திற்கு ‘இடபம்’, ‘ஆனந்தவல்லி’ ஆகியவை நல்ல நாவல்கள். ஒன்று சமகாலம் மற்றொன்று நல்ல ஆய்வில் எழுதப்பட்டது. இரண்டையும் எழுதியவர் பெண்கள், அவர்கள் எந்தக் குழுவிலும் இல்லை என்பதால் பெரிய எழுத்தாளர்கள் அவற்றைக் கண்டுகொள்ளவில்லை. தமிழிலக்கியம், தமிழ்நாட்டைப் பொறுத்தவரை பீடங்களால் நிரப்பப்பட்டிருக்கிறது, தொழுபவர் ஆசி பெற்றுக்கொள்ளலாம். இந்த நிலை மாற, புதியவர்கள், குறிப்பாகப் பெண்கள் காத்திரமான படைப்புகளுடன் வருவது மட்டுமே தீர்வு.

**அது எதிர்கொள்ளும் சவாலும் நெருக்கடிகளும் சாதனைகளும்?**

மேற்கூறிய பதிலிலேயே இதற்கும் பதிலிருக்கிறது.

**புலம்பெயர் இலக்கியம், ஈழ (இலங்கை) இலக்கியம், இந்தியத் தமிழிலக்கியம், மலேசிய இலக்கியம் என எல்லாமே இன்று வாசிக்கக் கூடிய அளவில் சேர்ந்து கிடைக்கின்றன. இதில் நீங்கள் கவனித்துள்ள சிறப்பு அடையாளங்கள்? உங்களை அதிகம் ஈர்த்துள்ளது எது?**

என்வரையில் எல்லாமே தமிழ் இலக்கியங்கள். ஒவ்வொரு பிரதியும் முன்முடிவுகள் ஏதுமின்றி விமர்சனத்திற்குள்ளாக்க வேண்டியதே. மலேசிய இலக்கியத்தில் குறிப்பாக நவீன், பாண்டியன் படைப்புகளில் தொன்மம் கலந்து வருகிறது. சிங்கப்பூரில் பல நம்பிக்கை தரும் எழுத்தாளர்கள் எழுதி வருகிறார்கள். ஈழ இலக்கியத்தில் என்னைக் கவர்ந்தது, குறிப்பாக சாந்தன், அகரமுதல்வன், யதார்த்தன் போன்றோரின் செறிவான மொழி. என்னைப் பொறாமை கொள்ள வைக்கும் மொழி இவர்களுக்கு. என்னுடைய வாசிப்பு வேகத்திற்கு நகுலாத்தை ஒரே நாளில் முடிக்கும் பக்கஅளவு கொண்டது. அந்த மொழியை ரசிக்கக் கூடுதல் நாட்கள் எடுத்துக்கொண்டேன். பெண்களில் தமிழ்நதி, பிரமிளா பிரதீபன் எழுத்துகள் பாலின வேறுபாட்டைக் கடந்தவை. ஈழஇலக்கியத்தில் பலருக்கும் நகைச்சுவை இயல்பாக வருகிறது. இந்தியத் தமிழிலக்கியத்தில் மாறுதல்கள் நேர்வதற்கான அறிகுறிகள் புதியவர்கள்



வரவால் தோன்ற ஆரம்பித்திருக்கின்றன. இது பரிசோதனைக் கட்டம், பொறுத்திருந்து பார்க்கலாம்.

**இந்திய மொழிகளில் இன்றைய இலக்கியச் சூழல்? இதில் தமிழிலக்கியம் எப்படியிருக்கிறது?**

இந்திய மொழிகளில், இந்திக்குப் புக்கர் விருதுக்குப்பின் புத்துயிர் கிடைத்திருக்கிறது. இன்னும் பல நல்ல படைப்புகளை எதிர்பார்க்கலாம். என்னுடைய வாசிப்பு ஆங்கிலம் மூலமாகவே நேர்வதால் இந்திய இலக்கியம் குறித்த முழுமையான கருத்தை என்னால் சொல்வதற்கில்லை. ஆங்கிலத்தில் இப்போது எழுதுபவர்களில் வெகுசிலர் தவிர மற்றவர்கள் மீது எனக்குப் பெரிதாக மரியாதை இல்லை. தென்னிந்தியாவில் மலையாளம், கன்னடம் இரண்டுமே தமிழை விட முன்னிடத்தில் இருக்கின்றன, இந்த உண்மையை ஒப்புக்கொள்ள மனதுக்குக் கஷ்டமாக இருந்த போதிலும். ஒருவர், இருவரை நம்பி ஒரு மொத்த இலக்கியத்தை எடைபோடுவதற்கில்லை, அந்த வகையில் நாம் நடக்க வேண்டிய தூரம் நிறையவே இருக்கின்றது.

**ஆங்கிலத்தில் புதிய நாவல்கள் எப்படியான மாற்றங்களோடு வருகின்றன? கடந்த பத்து ஆண்டுகளில் உங்களுக்குப் பிடித்த நாவல்கள்? எழுத்தாளர்?**

ஆங்கிலத்தில் குறிப்பிடத்தக்க விஷயம் ஒரு நூலுக்கான பின்னணியாய்வு (Background research). புனைவுகளும் அவையின்றி வருவதில்லை. கல்லூரி மாணவி வைஷ்ணவி படேல் எழுதிய கைகேயி எவ்வளவு நூல்களை ஆய்வு செய்து எழுதப்பட்ட நூல்! அதனால் தகவல் பிழைகள் அங்கே துர்லபம். இன்னொன்று அங்கு எடிட்டர் எவ்வளவு பெரிய ஆளுமை என்றாலும் கத்தரிக்கோல் வைக்கவோ பொருந்தாததை சொல்லவோ யோசிப்பதில்லை. ஆங்கிலத்தில் நான் குறைந்தபட்சம் நூறு எழுத்தாளர்களைத் பின்தொடர்கிறேன். அட்வுட், ஆலிஸ் மன்றோ, யியுன் லி, சாயாகா முராட்டா, இஸபெல் அலண்டே, ஜூம்பா லகரி என மிகப் பிடித்தவர்களே இருபத்தைந்துக்கு மேல்.

**அண்மையில் வந்த ஆங்கில நாவல்களில் நீங்கள் கவனித்த அல்லது உணர்ந்த - சொல்லக் கூடிய மாற்றம்?**

நாவல்கள் நேர்க்கோட்டில், ஒரே மைய இழையை விரித்துக்கொண்டு செல்வது பல வருடங்களுக்கு முன்பே குறைந்துவிட்டது. Book of Goose என்ற பாஃக்னர் விருதைச் சென்ற வருடம் பெற்ற நாவல் ஒரு நாஸ்டால்ஜியா. இவ்வருடம் புக்கரில் வந்த பல நாவல்களில் அவர்களது நாட்டுக்கேயுரிய பிரச்சனையை எழுதுகிறார்கள். (The Seven Moons of MaaliAlmeida) அத்துடன் பாரம்பரியக் கதைசொல்லலில் அம்மா - மகள் உறவு குறித்தும் தவறாது ஒரு நாவலேனும் வருகிறது. அல்புனைவின் சாயலில், சுயசரிதை + புனைவு கலந்த நாவல்களையும் எழுதத் தொடங்கியிருக்கிறார்கள். ஆங்கில வாசிப்பு சமுத்திரம்.

**ஐரோப்பா, அமெரிக்காவுக்கு அப்பால் யப்பானிய, சீன, அவுஸ்திரேலிய, ஆபிரிக்க, ரஷ்ய இலக்கியங்களின் இன்றைய போக்கு?**

ஜப்பானிய இலக்கியம் தற்போது பெண்களால் சூழப்பட்டிருக்கிறது. மிகத்திறமையானவர்கள் எழுதிக் கொண்டிருக்கிறார்கள். ஆப்பிரிக்க இலக்கியமும் செழுமையானது. இந்த இலக்கியங்கள் குறித்துத் தனிக் கட்டுரைகள் எழுதியுள்ளேன். உங்களுக்கு விருப்பம் இருந்தால் தனி இணைப்பாகச் சேர்க்கலாம். ரஷ்ய, ஆஸ்திரேலியா இலக்கியங்களில் புக்கருக்கு வந்தவர்களைப் போல் முக்கியமானவர்களின் ஓரிரு நூல்கள் மட்டுமே வாசித்துள்ளேன். அந்தப் பகுதியில் என் வாசிப்பு குறைவு. ஆஸ்திரேலியாவில் உலகம் முழுக்கப் படித்த எழுத்தாளர் The Book Thief நாவலை எழுதிய Markus Zusak.

**19, 20ஆம் நூற்றாண்டுகளில் ரஷ்ய இலக்கியம் Leo Tolstoy, Fyodor Dostoevsky, Ivan Turgenev, Vladimir Nabokov, Mikhail Bulgakov, Anton Chekhoஃ போன்ற மேதைகளால் இருந்த நிலையிலிருந்து இன்று கீழிறங்கியதாக உள்ளதல்லவா!**

ஆமாம் அதில் சந்தேகமேயில்லை. Lyudmila Ulitskaya, Viktor Pelevin போன்ற Quality writers இப்போது இல்லாமலில்லை. ஆனால், இன்றைய உலக இலக்கியத்தில் அவர்கள் பங்கு மிகச்சிறியது. இன்றும் உலக வாசகர்ககள் தஸ்தயேவ்ஸ்கி, டால்ஸ்டாயைப் படிப்பது போல் இவர்களைப் படிப்பதில்லை.

தமிழ்க் கவிதைகளின் இன்றைய தன்மை அல்லது போக்கு?

கவிதைகளிலும் உலகத்தரம் வாய்ந்த கவிதைகளை எழுதுபவர்கள் நம்மிடையே இருக்கிறார்கள். யவனிகா, பெருந்தேவி, தீபுஹரி, வே.நி. சூர்யா, ஜே.ரோஸ்லின் போன்று பத்து பேரையேனும் குறிப்பிட முடியும். ஆனால், பெருவாரியான தமிழ் கவிதைகள் துணுக்குகளாய் முடிகின்றன. அதற்கிடையில் நல்ல கவிதைகளை மெனக்கெட்டால் மட்டுமே கண்டுபிடிக்க முடியும்.

பெரும்பாலான வாசகர்கள் இன்று கவிதையை வாசிப்பது குறைவு. எழுத்தாளர்களில் கூட அதிகமானோர் கவிதையின் பக்கம் பார்ப்பதில்லை. ஆனால், நீங்கள் கவிதைகளையும் ஆர்வத்தோடு படிக்கிறீர்கள். இந்த ஈடுபாட்டுக்குக் காரணம்?

மேற்கூறிய காரணம் தான். ஆயுள் குறைவு, வாசிக்க வேண்டியவை அதிகம். கவிஞர்களே கூட அதிகமாக கவிதைகள் வாசிப்பதில்லை. ஒரு போட்டிக்காக நூற்றைம்பது கவிதைத் தொகுப்புகளை வாசிக்க வேண்டியதாயிற்று. அதில் விரல்விட்டு எண்ணும் அளவிலேயே கவிதை என்றால் என்ன என்று புரிந்தவர்கள் இருந்தனர். அதன்பின்னர் அவர்கள் நல்ல கவிதை எழுத வேண்டும். இது ஒருபெரிய செயலாக்கம் (process). எனக்குத் தனிப்பட்ட வகையில் கவிதை மீது ஒரு மயக்கம், அதனால் தான் முத்தெடுக்கும் நம்பிக்கையில் கடலில் குதிக்கிறேன்.

சில எழுத்தாளர்கள் அவசரமாக எழுதிப் புத்தகம் போடுகிற அளவுக்கு நிறைய வாசிப்பதில்லை. தனித்துவமாக எழுத வேண்டும் என்றால் நிறைய வாசிக்க வேணும் என்ற விதமாகக் குறிப்பிட்டுள்ளீர்கள்? இந்த உண்மையை - நியாயத்தை ஏற்றுக்கொள்வதற்கு எத்தனைபேர் தயாராக இருக்கிறார்கள்?

வெகு குறைவு. பிரபல எழுத்தாளர்கள் பலர் கதைச்சுருக்கத்தைப் படிக்க இணையம் வழிசெய்கின்றது. படிப்பதை விடப் படித்தது போல் காட்டிக்கொள்பவர்களுக்கு யாரும் எதுவும் செய்வதற்கில்லை. அவர்களது வாசகர்கள் பழனி செங்கம்மாவைக் கட்டிப்பிடித்தது பற்றி என்ன நினைக்கிறீர்கள் என்று கதைச்சுருக்கத்தில் வராத கேள்விகளைக் கேட்டுப் பழகட்டும். ஆங்கிலத்தில் ஸ்டீபன்கிங் போல வருடத்திற்கு ஒரு ஆயிரம் பக்க நாவல் எழுதுபவர். அவரே வருடத்திற்கு எண்பது புத்தகங்களுக்குக் குறையாது வாசிக்கிறார். எந்த ஆங்கில எழுத்தாளரை வேண்டுமானாலும் கேளுங்கள், அவருக்கென்று வாசிக்க ஒரு பட்டியல் வைத்திருப்பார். இங்கு அது பரவலாக இல்லை. புதியவர்களேனும் பழக வேண்டும்.

எழுத்தைப் போலப் பதிப்பும் ஒரு முக்கியமான துறை. அப்படித்தான் மொழிபெயர்ப்பும். உங்களை அதிகமாக ஈர்க்கின்ற மொழிபெயர்ப்புகள்? பதிப்பகங்கள்?

மொழிபெயர்ப்பு என்பது ஏற்கனவே ஒருவர் வாசித்து அதனால் கவரப்பட்டு, அதைத் தமிழுக்குக் கொண்டு வரவேண்டும் என்ற விருப்பத்தால், சிரமம் எடுத்துச் செய்வது. எனவே அது ஒரு படிநிலையை ஏற்கனவேயே கடந்து விடுகிறது. தமிழில் தரமான மொழிபெயர்ப்பாளர்கள் சமீபகாலங்களில் இயங்கி வருவது ஒரு நல்ல அறிகுறி. எண்ணிக்கை அளவில் காலச்சுவடு, எதிர், அலைகள் அதிக அளவில் மொழிபெயர்ப்புகளைக் கொண்டு வந்த பதிப்பகங்கள். தரமான புத்தகங்களைத் தரும் எந்தப் பதிப்பகமும் என்னை ஈர்க்கும் பதிப்பகம் தான்.

எழுத்தாளர்களைச் சந்திப்பதில் உள்ள விருப்பத்தைப்போல, வாசர்களைச் சந்திப்பதற்கு விருப்பம் உண்டாவதில்லையா? நீங்கள் விரும்புகின்ற வாசகர்கள்? வாசகர் அமைப்புகள்?

நானாக எழுத்தாளரை முனைந்து சென்று சந்திப்பதேயில்லை. வாசகர்களைச் சந்திப்பதை விட உரையாடுதலில் விருப்பம் உண்டு. பாலின பேதமின்றி இலக்கிய வாசகர்கள் அனைவரும் எனக்கு நெருக்கமானவர்களே.

ஐம்பது ஆண்டுகால தமிழிலக்கத்தை (நாவல், சிறுகதை, கவிதை) எப்படி சுருக்கமாக மதிப்பிடுவீர்கள்? மனதிலே நிற்கும் காட்சிகள்?

தமிழே எனக்கு நெருக்கமான மொழி. அன்னா கரினினாவை விட யமுனா, இந்து போன்றோர் எனக்கு நெருக்கமானவர்கள். தமிழில் நாம் நிறையவே வளர்ந்திருக்கிறோம் இந்த ஐம்பது வருடங்களில். இல்லை என்று சொல்வதற்கில்லை. ஆனால், காலை எழுந்து மாலை ஆறு மணிவரை அலுவலகத்தில் இட்ட வேலையை முடித்து, மறுநாளுக்கு மார்க்கெட்டில் காய்கறிகள் வாங்கி வீடு வந்து, பின் இலக்கிய சேவை செய்யும் எழுத்தாளர்களுக்கு exposure என்பது குறைவு. சொல்லப்போனால் ஈழத்தில் இருந்து இன்னும் காத்திரமான படைப்புகளை எதிர்பார்க்கலாம். போலவே, புலம்பெயர் தமிழர்கள் இன்னும் இலக்கிய எல்லையை விரிவாக்கம் செய்யக்கூடும். மனதில் நிற்கும் தமிழிலக்கியம் பல.

நவீனத் தமிழிலக்கியத்தின் செம்மைக்கு புதுமைப்பித்தன், ந.பிச்சமூர்த்தி, க.நா.சு, சி.சு.செல்லப்பா, சுந்தர ராமசாமி, எஸ்.பொ,



**மு.தளையசிங்கம், டானியல், சி.மணி, நகுலன், ப.சிங்காரம், கு.அழகிரிசாமி என ஒரு முன்னோடிகளின் வரிசை உண்டு. இலக்கிய வரலாற்றில் இதுபோன்றவர்களை எப்படி நீங்கள் மதிப்பிடுவீர்கள்?**

ஏன் இதில் கு.ப.ரா, தி.ஜா இல்லை? அவர்களே பெண்களின் மனஅவசங்களை முதலில் இலக்கியமாக்கியவர்கள். நீங்கள் குறிப்பிட்டவர்கள் இல்லை என்றால் இன்னும் கல்கி, அகிலன், நா.பா எல்லோரும் வேறு பெயரில் எழுதிக் கொண்டிருப்பார்கள். புதுமைப்பித்தன் காலத்திற்கு முன்பே பிறந்த கலைஞன். ஒவ்வொருவருமே ஒவ்வொரு வகையில் மிகத்திறமை வாய்ந்தவர்கள்.

**தமிழில் பெண்களின் எழுத்துகளும் தலித் எழுத்துகளும் உருவாக்கியுள்ள இடம்? தமிழுக்கு வெளியே இவற்றின் இடம்?**

இன்று நாம் யாரை எல்லாம் மாஸ்டர்கள் என்று சொல்கிறோமோ அவர்கள் எல்லாம் எழுதிக் கொண்டிருக்கும் போது தான் அம்பை முளைத்தார். தன்காலத்திற்கு முந்தைய படைப்புகளைக் கொடுக்க 'வாசவேஸ்வரம்' கிருத்திகாவால் முடிந்தது. இப்போது நிறையப்பேர் எழுதுகிறார்கள். ஆனால், பெரும்பான்மை குறுகிய வட்டத்திற்குள் சுழல்கிறது. அவர்களுக்கு நிர்ப்பந்தங்கள், கட்டுப்பாடுகள் இருக்கின்றன. அது அகல வேண்டும். அதன் பின்னரே அவர்களால் சாதிக்க முடியும். இலக்கியத்தில் தலித்தியம் சிறப்பாக வந்த படைப்புகள் 'பிறகு', 'கருக்கு', 'தூப்புக்காரி' போன்ற வெகுசிலவே.

**ஈழ இலக்கியம் போர் (போராட்ட ஆதரவு) இலக்கியம், போர் எதிர்ப்பு இலக்கியம் என வகைப்பட்டுள்ளது. இதில் இலக்கிய அடிப்படையில் உங்களை அதிகமாக ஈர்த்தது?**

என் நிலைப்பாடு விடுதலைப்புலிகள் ஆதரவு. அவர்கள் இல்லை என்றால் எம்மவர் நிலை எவ்வளவு தாழ்ந்திருக்கும் என்பதைக் கற்பனை கூட செய்ய முடியவில்லை. அவர்கள் நிறையவே குற்றங்கள் புரிந்தார்கள். அது வேறு விஷயம். இலக்கியத்தில் படைப்பின் நுட்பத்தையே நான் ரசிக்கிறேன், அவர்கள் நிலைப்பாடு எவ்வாறு இருந்தாலும். அதனால் தான் ஷோபாசக்தி, யதார்த்தன், மெலிஞ்சிமுத்தன், அகரமுதல்வன், சாந்தன் என எல்லோரையும் இரசிக்க முடிகிறது.

**தமிழில் ஏராளமான வட்டார (பிராந்திய) மொழி வழக்கில் எழுதப்படுகிறது. பண்பாட்டியல், சமூகவியல், மொழியியல் துறையினர் இவற்றை முக்கியமானது எனக் கொண்டாடுகின்றனர். ஒரு தீவிர வாசகர் என்ற வகையில் இதைக் குறித்து உங்கள் நிலைப்பாடு என்ன?**

வட்டாரமொழி வழக்கொழிந்து போகாதிருக்க வேண்டுமெனில் இலக்கியத்தில் தொடர்ந்து வரவேண்டும். அந்த வகையில் அது முக்கியமானது. இரண்டாவது ஒரு மொழி எப்படி வேறு பகுதிகளில் வித்தியாசப்படுகிறது என்பதையும் அறிய முடியும். என் பாட்டி 'நான் பரிசகெட்டுப் போனேன்' என்பார். ஈழத்தில் நீங்கள் எல்லோரும் அதைப் புழங்குகிறீர்கள். தமிழ்நாட்டில் தென்பகுதி தவிர்த்து மீதியுள்ளோருக்கு இதன் பொருள் தெரியாது.

இன்னொரு வகையில் சமீபத்தில் வெளிவந்த 'நொய்யல்' அருமையான படைப்பு. ஆனால், அவர் திருப்பூர் பகுதி வெளிகிராமங்களில் வசிக்கும் மக்களின் கடுமையான வட்டார வழக்கை உபயோகித்திருந்தார். நான் அங்கு சில வருடங்கள் இருந்ததால் எனக்குப் பிரச்சனையில்லை. நண்பர்கள் பலரும் அந்த நாவல் உட்புக விடவில்லை என்று கூறினார்கள்.

**நீங்கள் எழுத விரும்புகின்ற நாவல்?**

இந்தப் பிறவியில் நான் எழுதுவதற்கில்லை. வாசிக்க வேண்டியவை பல நூறுகள் இருக்கின்றன. இந்த இப்பிறவிக்கு வாசிப்பின்பம் மட்டுமே போதும்.

**உங்களுடைய கவிதை?**

என் மகள். ஒரே கவிதை.

கருணாகரன் <poompoom2007@gmail.com>

# முயங்கொலிக் குறிப்புகள்

கயல்

## 32. எதிர் நீச்சல்

அன்றொரு நாள்
அந்தியில் முந்திவந்து
அல்லிக்குளத்தருகே
உனக்காகக் காத்திருந்தபோது
பிந்திவந்த பிழையை
நேர்செய்ய

முகமுயர்த்தி
நீண்ட நேரம் மூச்சடக்கி நீந்த வல்லவர்
நம் இருவரில் யார்
எனும் போட்டியை முதலில் முன்மொழிந்தது
நீதான்.

நீச்சலில்
உன் வித்தைகள்
ஒவ்வொன்றும் தெரியும் எனக்கு
என் சாகசங்கள்
எல்லாமும் அறிவாய் நீயும்
எனவே
சமர் என்பது
சமமானவர்களுக்கு இடையே மட்டுமே
எனும் நியதியும்
இதில் மீறப்படவில்லை.

தேதி குறிக்கப்பட்ட தினத்திலிருந்து
நாளும் காலையில்
நீச்சல் குளமே கதியென
நீந்திக் கிடந்தேன்.

உன்னை வென்று
நான் பெறப்போகுமிந்தக் கோப்பை
உடைந்த மனதில் இருந்து தளும்பும்
ஏமாற்ற நதியென்று அறிவேன்
ஆயினும்
நான் நிரூபிக்க விரும்பியது
எனக்கே என்னை.

விசித்திரமாக இருந்தது
பயிற்சிக் காலம் முழுதும்
கண்ணெட்டும் தூரம்வரை
உன்னை எங்கும் காணாதது.

அலைபேசியில் ஒரு
அழைப்போ
அக்கறையான விசாரிப்போ
எதுவும் இல்லை.

நான்
அழைத்தால்
அவகோடா
மாதுளை ரசம்
வாதுமைக் கொட்டை
வாழைப்பழம்
பூசணி விதை
மத்தி
கானாங்கெளுத்தி
முந்திரி
தர்பூசணி
என்று போட்டிக்குப்
பொறுமையாய்த் தயாராவதாய்ச் சொன்னாய்.

புரியாமல் புன்னகைத்தேன்.

என்று நடந்தது
எப்படி நிகழ்ந்தது
எதுவும் புரியாதபோதே
நீ வென்றதாக முரசறைந்தபோதுதான்
உணர்ந்தேன்
நானே உன் கடல் என்பதும்
இதில் நான்
எப்போதும் தோற்கவே வாய்ப்பில்லை என்பதும்.

(தொடரும்)

கயல் <dr.kayalvizhi2020@gmail.com>



# அம்ருதா பதிப்பகம்

## புதிய வெளியீடுகள்



விலை.150/- பக்கங்கள்.140




விலை.250/- பக்கங்கள்.256



விலை.150/- பக்கங்கள்128



விலை.140/- பக்கங்கள்.140

**நேரில் வந்து புத்தகங்களை வாங்குபவர்களுக்கு 10% தள்ளுபடி வழங்கப்படும்**


#1 கோவிந்த ராயல் ஹெவென்ட் அடுக்ககம், 12, முதலாவது முக்கிய சாலை,
2ஆம் விரிவாக்கம்,சி.ஐ.டி. நகர் - கிழக்கு, நந்தனம், சென்னை - 600035.
போன்: 044 - 24353555, 94440 70000. மின்னஞ்சல் : info.amrutha@gmail.com

# பிரதிவாதி

## கவிப்பித்தன்

“சி.சி.109/2020.. கவர்ன்மென்ட் விட்னஸ் என்கொய்ரி... அக்யூஸ்ட் சந்திரசேகரன்...” முழ நீளத்திலிருந்த வழக்குக் கட்டைப் பார்த்து சத்தமாக வாசித்துவிட்டு அமீனாவைப் பார்த்தார் நீதிமன்ற எழுத்தர்.

“சந்திரசேகரன்..சந்திரசேகரன்..சந்திரசேகரன்...” மார்பின் மீது நீதிமன்றப் பதாகையுடனான நீளமான டவாலியை அணிந்திருந்த அமீனா மிகச் சத்தமாக கூவ, நீதிமன்ற வளாகமே பரபரப்பானது.

முகத்தில் நெளியும் வியர்வையைக் கூட துடைத்துக்கொள்ளாமல் ஓடி வந்த சந்திரசேகரன், நீதிபதியைப் பார்த்து பவ்வியமாக வணங்கினார். நீளமான குற்றவாளிக் கூண்டில் ஏறி நின்றார்.

கொண்டை ஊசியைப் போல நீண்டிருந்த நீதிமன்ற அவையில் உட்கார்ந்திருந்த மூத்த வழக்கறிஞர்கள், அவர்களுக்குப் பின்னால் நின்றிருந்த அவர்களின் இளவல்கள், அரசு வழக்கறிஞர், நீதிமன்ற ஊழியர்கள் என எல்லோருமே நீதிமன்ற எழுத்தரைத் திரும்பிப் பார்த்தனர்.

“விட்னஸ் த்ரீ... பர்ஸ்ட் என்கொய்ரி.... கம்ளைனன்ட் கஜராஜன்...” சத்தமாய் வாசித்த எழுத்தர், மீண்டும் அமீனாவைத் திரும்பிப் பார்க்க, “கஜராஜன்...கஜராஜன்...கஜராஜன்...” என இன்னும் சத்தமாக வாசலைப் பார்த்துக் கூவினார் அமீனா.

இப்போது நீதிபதியும் வாசலைத் திரும்பிப் பார்க்க, ஜனக் கூட்டத்திலிருந்து தன்னை மெதுவாக உருவிக்கொண்டு, நிதானமாக நடந்து வந்து நீதிமன்ற அவைக்குள் நுழைந்தான் கஜராஜன்.



முப்பது வயதுக்குள்தான் இருக்கும். சராசரி உயரம். சராசரியான மாநிறம். பக்கவாட்டில் வகிடெடுத்து வாரிய தலை முடி கலைந்திருந்தது. நெற்றியில் பூசியிருந்த திருநீறு மட்டும் புத்தம் புதிதாகத் தெரிந்தது. நீல நிறத்தில் முழுக்கைச் சட்டை. கருப்பு நிற பேண்ட்.

தலைக்கு மேலாக சுற்றிக் கொண்டிருந்த மின் விசிறிகள் கூட தமது வழக்கமான அரசாங்க சத்தத்தைக் குறைத்துக்கொண்டதைப் போல சத்தமின்றிச் சுழல, அதே நிதானத்துடன் நடந்து நீதிபதியின் இடது புறமிருந்த பக்கவாட்டுக் கூண்டில் ஏறி நின்றான் கஜராஜன்.

“சத்தியமா சொல்றனு சொல்லுங்க...” என்றார் எழுத்தர்.

“நானு எப்பவுமே சத்தித்த மட்டும்தாங்க சொல்லுவேங்...”

“சரிங்க.. சத்தியமா சொல்றேனு சொல்லுங்க..”

“அததாங்க சொல்றங்.. எப்பமே சத்தித்த மட்டும்தாங் சொல்லுவங்..”

“சரி... பேர் சொல்லுங்க..”

“கஜராஜன்..”

“அப்பா பேரு..?”

“நீதிமணி..”

நீதிபதியின் எதிரில் நுனி இருக்கையில் பவ்வியமாக உட்கார்ந்திருந்த தட்டச்சர் அவற்றை கணிப்பொறியில் வேகவேமாக தட்டச்சு செய்து கொண்டிருந்தாள்.

நீதிபதி தலையசைக்க, அரசு வழக்கறிஞர் எழுந்து நீதிபதியைப் பார்த்து தலை தாழ்த்தி வணங்கிவிட்டு, கூண்டின் எதிரில் வந்தார்.

“கஜராஜன்.. எதிர்ல குற்றவாளி கூண்ட்ல நிக்கறாரே.. பிரதிவாதி.. அவர உங்களுக்கு தெரிமா..?” எனக் கேட்டார்.

கஜராஜன் இடது புறம் திரும்பி, நீதிமன்ற அவையின் கடைசியில் இருந்த

கூண்டில் தலைகுனிந்து நின்றிருந்த சந்திரசேகரனைப் பார்த்தான். சட்டென அவனது முகம் மாறியது. கன்னத்தின் சதைகள் இறுகின. மாஞ்செடியின் வேர்களைப் போல நெற்றி நரம்புகள் முறுக்கேறின.

“ஏய்.. நீ எதுக்கு இங்க வந்த.. உன்ன யாரு இங்க வரசொன்னது..” என சந்திரசேகரனைப் பார்த்து ஆவேசமாகக் கத்தினான்.

ஒட்டு மொத்த அவையும் அதிர்ச்சியோடு கஜராஜனைப் பார்த்தது. அவைக்கு உள்ளேயும் வெளியேயும் ஒரே சலசலப்பு.

“சைலன்ஸ்..பேசாதீங்க..” என கத்தினார் ஜவான்.

“கோர்ட்ல இப்டிலாம் கத்தக் கூடாதுங்க.. அவரத் தெரிமா... தெரியாதா.. அத மட்டும் சொல்லுங்க..?” என அதட்டினார் அரசு வழக்கறிஞர்.

“அவனா.. அவங் கொலகாரங்..” என்றான் கஜராஜன்.

“ஏங்க.. அக்யூஸ்ட தெரிமா.. தெரியாதா.. அத மடடும் சொல்லுங்க..” என கடுப்புடன் கேட்டார் நீதிபதி.

மீண்டும் தலையைத் திருப்பி சந்திரசேகரனை உற்றுப் பார்த்தான் கஜராஜன். அவனையும் சந்திரசேகரனையும் மாறி மாறிப் பார்த்தன சுற்றியிருந்த அத்தனை கண்களும்.

கஜராஜன் அப்போது ஐந்தாவது படித்துக் கொண்டிருந்தான். அவர்களின் வீட்டை ஒட்டியே அவர்களுக்கு ஒரு ஏக்கர் நஞ்சை நிலமிருந்தது. அதில் கஜராஜனின் அப்பா நீதிமணி கேழ்வரகு, கம்பு, சோளம் என பருவம் தவறாமல் பயிர் செய்துகொண்டிருந்தார்.

மெதுமெதுவாக விவசாயம் பொய்க்கத் தொடங்கிய நேரத்தில், இவர்களின் ஊருக்குள்ளும் ஊதுவத்தித்தொழிலைகொண்டு வந்தார் வள்ளிமலை கந்தசாமி. சன்னமாக அரைத்த ரவையைப் போன்ற கருப்பு நிற நொருவா மாவும் சப்பாத்தி மாவைப் போலப் பிசைந்த அதே கருப்பு நிற வத்தி மாவுமாக, வத்தி மனையின் கீழே கால்களை நீட்டி உட்கார்ந்து வத்தி உருட்டத் தொடங்கினார்கள் ஊர்ப் பெண்கள்.

பத்தாவது வரை படித்திருந்த கஜராஜனின் அக்கா சௌந்தரியும் அம்மா திருவள்ளியும் போட்டி போட்டுக்கொண்டு வத்தி உருட்டினார்கள். ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமை காலையிலும் உருட்டிய வத்திக்கு பணப் பட்டுவாடா நடக்கும்.

பெண்களின் கைகளில் கொஞ்சம் காசு நடமாட்டம் தொடங்கியது. கிழவிகளும் குமரிகளுமாக சேர்ந்து கொண்டு ஞாயிற்றுக் கிழமை சாயந்தரமானால் கூட்டம் கூட்டாக வள்ளிமலை சினிமா கொட்டகைக்குப் போவார்கள்.

எல்லா குமரிப் பெண்களையும் போலவே சௌந்தரிக்கும் தனது தம்பி கஜராஜன் என்றால் உயிர். அவனையும் சினிமாவுக்குத் தன்னுடன் இழுத்துக்கொண்டு போவாள். பழைய படம், ரொம்பப் பழைய படம் என எப்படியும் மாதத்தில் இரண்டு மூன்று படங்களாவது பார்த்து விடுவார்கள்.

குமரிகள் சீவிச் சிங்காரித்துக்கொண்டு.. பட்டாளம் பட்டாளமாய்ப் படத்துக்குப் போனால் ஊர் இளசுகள் சும்மா இருப்பார்களா..? அவர்களும் பின்னாலேயே படை எடுப்பார்கள். ஊரிலிருந்து ஆர்ப்பாட்டமாய்க் கிளம்பி... நீவாநதியில் இறங்கி, மணலை வாரி இறைத்துக்கொண்டு நடந்து போகிற போது.. பார்க்கப் போகிற படத்தின் கதையை யாராவதுமேலோட்டமாகசொல்வார்கள். திரும்புகிற போது.. நடிகர்களின் நடிப்பைப் பற்றியும் நாயகிகளின் அழகைப் பற்றியும் அவர்களின் அலங்காரங்களைப் பற்றியும் வாய் ஓயாமல் பேசிக்கொண்டுத் திரும்புவார்கள்.

இவர்கள் படத்திற்குப் போகிற ஒவ்வொரு முறையும்.. சந்திரசேகரனும் தவறாமல் வருவான். அவன் நல்ல உயரம். மாநிறத்துக்கும் கொஞ்சம் தூக்கலான நிறம். சிப்காட்டில் ஏதோ ஒரு கம்பனியில் உதவியாள் வேலை.

அவனைப் பார்த்தாலே ஆத்திரமாக வரும் சௌந்தரிக்கு. தன் அக்காவுக்கு பிடிக்காது என்பதால் கஜராஜனுக்கும் அவனைப் பார்த்தாலே எட்டிக்காய்க் கசப்பு.

இவர்களின் நிலத்துக்குப் பக்கத்து நிலம்தான் சந்திரசேகரன் குடும்பத்தினரின் நிலம். ஒரே கிணற்றுப் பாசனம். சந்திரசேகரனின் அம்மா இவர்களுக்கு அத்தை உறவு. ஆனாலும் இவர்களுக்கிடையில் வாய்க்கால் தகராறு தீராததாகவே இருந்தது.

கிணற்றிலிருந்து இவர்களின் நிலத்திற்கு வருகிற கால்வாய் அவர்களுடைய நிலத்தின் ஓரத்தில் தான் வரவேண்டும். இவர்களுக்கும் கால்வாய்ப் பாத்தியதை இருந்தது. ஆனாலும் ஒவ்வொரு முறை ஏர் ஓட்டும் போதும் கால்வாயையும் சேர்த்தே உழுது சமமாக்கி விடுவார் சந்திரசேகரனின் அப்பா கடிகாஜலம். அதனால் அடிக்கடி அவர்களுக்குள் வாய்த் தகராறும் சில நேரங்களில் கைக் கலப்பும் நடக்கும்.

கடிகாஜலம் மகா முரடன். அவரிடம் பஞ்சாயத்துப் பேச வேண்டும் என்றால் ஊர் நாட்டாண்மை கூட சத்தமில்லாமல் ஒதுங்கிக்கொள்வார்.

எனவே ஒவ்வொரு முறையும் இவர்கள் புதிதாகக் கால்வாய்ப் பிடித்துதான் நிலத்திற்குத் தண்ணீர் கொண்டு வர வேண்டும். அதனாலேயே அவர்களுக்குள் தீராத பகை கனன்று கொண்டிருந்தது.



ஆனாலும் சந்திரசேகரனுக்கு மட்டும் சௌந்தரி மீது ஒரு கண் இருந்தது.

சௌந்தரி பெயருக்கேற்ப சௌந்தர்யமாகவே இருந்தாள். முறுக்கேறிய சற்றுத் தாட்டியான உடம்பு. பார்க்கப் பார்க்கச் சலிக்காத அகலமான முகம். நிறமும் சற்றுத் தூக்கல். குட்டையான தலைமுடிதான் என்றாலும் அவள் நடக்கிற போது அது குதிரை வால் போல அவள் முதுகில் செல்லமாய்க் குதிக்கும்.

படம் பார்க்கிற போதெல்லாம் ஆண்களுக்கான தரைப் பகுதியிலிருந்தோ நாற்காலிப் பகுதியிலிருந்தோ சௌந்தரியையே பார்த்துக் கொண்டிருப்பான் சந்திரசேகரன்.

ஒரு நாள்.. கமலஹாசன் படத்தின் இடைவேளை. தலைக்கு மேலாக குண்டு பல்புகள் மஞ்சளாக எரிந்து கொண்டிருந்தன. சோடா கலர்க்காரன் தலைச் சுமையோடு குறுக்கும் நெடுக்குமாய்க் கூவிக் கொண்டிருந்தான். சந்திரசேகரன் தன் நாற்காலியிலிருந்து எழுந்து நின்றான். அவனுக்கு முன்னால்தான் பெண்களுக்கான தரைப் பகுதி. அதன் பின் வரிசையில் உட்கார்ந்திருந்த ஒரு பெண்ணை கைத் தட்டிக் கூப்பிட்டான். அவள் திரும்பிப் பார்த்தாள்.

“உங்கள இல்லங்க.. உங்குளுக்கு முன்னால கீறவங்கள கூப்ட்டுங்க..” என்றான்.

அவள் திரும்பி, முன்னால் இருப்பவளுக்குச் சொல்ல, அவள் திரும்பிப் பார்த்தாள்.

“அய்யோ.. உங்கள இல்லங்க.. முன்னால கீறவங்கள கூப்ட்டுங்க..” என்றான் மறுபடியும்.

இப்படியே ஒவ்வொருவராக திரும்பிப் பார்த்து, முன்னால் இருப்பவர்களைத் திரும்ப வைக்க, கடைசியாக சௌந்தரி திரும்பிப் பார்த்தாள்.

பஜனைக் கோயில் சர்க்கரைப் பொங்கலைப் போல கொழகொழவென அவளைப் பார்த்து இளித்தான். பழையபடி “முன்னால கீறவங்கள..” என்றதும் அவளுக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டது. அவளுக்கு முன்னால் வெள்ளைத் திரைதான் இருந்தது.

“தூ.. வெக்கங்கட்ட நாயி...” எனக் காரித் துப்பிவிட்டு சட்டெனத் தலையைத் திருப்பிக்கொண்டாள். அன்றிலிருந்து அவன் பேரைக் கேட்டாலே அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. தொடர்ந்து எலியும் பூனையுமாகவே இருந்தது அவர்களின் குடும்பம்.

நாளாக நாளாக... பூத்துக் குலுங்குகிற இலுப்பை மரம்போல ஜொலித்துக்கொண்டிருந்தாள் சௌந்தரி. ஊர்க் கண்கள் மொத்தமும் அவள் மீதே இருந்தன.

அக்ராவரத்திற்குப் பக்கத்திலிருக்கிற வாணாபாடியிலிருந்து ஒரு வரண் வந்தது. பையன் பட்டதாரி. சிப்காட்டில் ஒரு பெரிய தோல்

தொழிற்சாலையில் எழுத்தர் வேலை. பார்க்க நல்ல லட்சணமாகவும் இருந்தான். இரண்டு குடும்பத்திற்குமே பரம திருப்தி.

இரண்டு வாரம் கழித்து ஒப்புத்தாம்பூலம், சித்திரை முதல் முகூர்த்தத்திலேயே திருமணம் என முடிவானது. மறுநாளே வள்ளிமலையில் ஒரு மண்டபம் பார்த்து முன்பணமும் கட்டிவிட்டார்கள். திருமண வேலைகள் மும்முரமாக நடக்கத் தொடங்கின.

ஒப்புத்தாம்பூலத்திற்கு இரண்டு நாட்களுக்கு முன்பு தான் அந்த இடி வந்து விழுந்தது.

சௌந்தரி காணாமல் போய்விட்டாள். பதறிப் போனார் நீதிமணி. உள்ளூர், வெளியூர் என எங்கெங்கோ தேடியும் ஒரு துப்பும் கிடைக்கவில்லை. ஊரிலிருக்கிற கிணறு, குளம், குட்டையைக் கூட ஒன்று விடாமல் தேடினார்கள்.

மறுநாள் தான் தெரிந்தது சந்திரசேகரனும் காணாமல் போனது.

யாருமே அதை நம்பவில்லை.

ஆறு நாள் கழித்து இருவரும் ஜோடியாக ஊர்த் திரும்பினார்கள். திருப்பதியில் கல்யாணம் நடந்ததாம். அப்படி அவர்களை ஜோடியாகப் பார்த்ததும் பேசிப் பேசி மாய்ந்தன ஊர் வாய்கள்.

மண்ணை வாரி வாரித் தூற்றிய சௌந்தரியின் அம்மா திருவள்ளி, வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு தெருவில் விழுந்து அழுது புரண்டாள்.

எரவாணத்திலிருந்த ஈட்டியை உருவிக்கொண்டு பாய்ந்த நீதிமணியை அய்ந்தாறு பேர் சேர்ந்து இழுத்துப் பிடித்தார்கள். கடிகாஜலத்தின் குடும்பமும் கத்தியும் அறிவாளுமாய் தயாராக நின்றது.

அன்றைய நாள் முழுவதும் மாரியம்மன் கோயிலில் தஞ்சம் புகுந்திருந்தது திருமண ஜோடி. ஊராரும் உறவினர்களும் தொடர்ந்து பேசிய பிறகு.. சந்திரசேகரனின் குடும்பத்தினர் மட்டும் இறங்கி வந்தனர்.

அப்போதும் கூட அதே ஆத்திரத்தோடுதான் கருவிக்கொண்டு நின்றது சௌந்தரியின் குடும்பம்.

“எங்க பொண்ணு ஆறு நாளிக்கி முன்னாலியே செத்து பூட்ச்சி.. ஆத்துல தலய முய்கிட்டம்.. இந்த பேபர்சி வேற யாரோ..” என பஞ்சாயத்தாரிடம் தீர்த்தே சொல்லிவிட்டார் நீதிமணி.

அடக்க முடியாமல் குலுங்கிக் குலுங்கி அழுதாள் சௌந்தர்யா. அவளது நூல் சேலையும் புதிய தாலிக் கயிறும் தொப்பட்டியாக நனைந்தன.

அடுத்த வாரமே நிலத்தையும் வீட்டையும் விற்றுத் தலை முழுகினார் நீதிமணி. அதோடு அந்த ஊரை விட்டு வந்தவர்கள் தான்.

இருபத்தியோரு வருடங்கள் ஓடிவிட்டன. தகரக்குப்பத்தில் புதிதாக கொஞ்சம் நிலம் வாங்கி, அங்கேயே ஒரு ஓட்டு வீடு கட்டி, சொந்த ஊர்ப்பக்கமே போகாமல் வைராக்கியமாக இருந்துவிட்டனர்.

சௌந்தரிக்கு ஒரு பெண்ணும் இரண்டு பையன்களும் பிறந்தது, அவை கான்ட்வென்ட்டில் படிப்பது, பெண் வளர்ந்து, சௌந்தரி போலவே இருப்பது என அவ்வப்போது காற்று வாக்கில் தகவல்கள் வருகிற போதெல்லாம் நீதிமணி அதே கோபத்தோடுதான் கத்துவார்.

கஜராஜனுக்கு மட்டும் அக்காவைப் பார்க்க வேண்டும் என்கிற ஆசை உள்ளுக்குள் இருந்தாலும் சந்திரசேகரனை நினைத்தாலே அவனுக்கும் சுருசுருவென ஆத்திரம் பற்றிக்கொண்டு வரும்.

சௌந்தரியின் மகள் பூங்கொடி வயதுக்கு வந்துவிட்டதாகவும் தாய் மாமன் சீர் செய்ய வேண்டும் எனவும் இவர்களுக்குத் தகவல் வந்தது. அப்போது கூட கிழக்கும் மேற்குமாய் எகிறிக் குதித்தார் நீதிமணி.

“ஆடு பக.. குட்டி மட்டும் ஒறவாய்டுமா.. பேத்தி கீத்தினு சொல்லிகினு யார்னா இங்கர்ந்து போனா அவ்ளோதாங்..” என கத்தினார்.

அந்த விசேசத்துக்கும் யாரும் போகவில்லை. திருவள்ளிக்கு மட்டும் மகளையும் பேரக் குழந்தைகளையும் பார்க்க உள்ளுக்குள் ஆசை துடித்துக் கொண்டிருந்தது.

பூங்கொடிக்குத் திருமணம் நிச்சயம் ஆன பிறகு.. சௌந்தரியும் சந்திரசேகரனும் பத்திரிகையோடு இவர்கள் வீட்டுக்கே வந்துவிட்டனர்.

திடீரென அக்காவைப் பார்த்ததும் கஜராஜனின் மனசுக்குள் சிலீரென ஒரு ஈரம் சுரந்தது. ஆனால், சந்திரசேகரனைப் பார்த்ததும் மீண்டும் அவனுக்குள் பழைய தீப்பற்றிக்கொண்டது.

எந்தத் தயவு தாட்சண்யமும் பார்க்காமல் சந்திரசேகரனின் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளினான் கஜராஜன். பெரும் மூர்க்கத்தோடு ஓடி ஈட்டியைத் தூக்கினார் நீதிமணி.

“அப்பா.. பழசெல்லாம் மறந்துட்டு எங்கொழந்த கல்யாணத்த வந்து நடத்தி வைப்பா..” என அவர் கால்களைப் பிடித்துக்கொண்டு கெஞ்சினாள் சௌந்தரி. ஈராக் காலில் ஒட்டிய வைக்கோலை உதறுவதைப் போல அவளை உதறினார் நீதிமணி.

கைகளைக் கூப்பியபடி கண்ணீர் வழிய வழிய கெஞ்சினாள். அவர் மனம் இரங்கவே இல்லை. அது ஊரடங்கு காலம். பாதி முகத்தை மறைத்திருந்த முகக்கவசம் கூட அவளது மனதின் ரணத்தை மறைக்க முடியாமல் கைவிட்டது. கண்ணீரால்

நனைந்து சொதசொதத்த முகக் கவசத்தைக் கூட தூக்கி எறிய முடியாமல்.. அதிலிருந்து கண்ணீர் சொட்டச் சொட்ட.. கதறியபடியே கிளம்பிப் போனாள் சௌந்தரி.

"கண்ணாலம்.. காரியம்.. கருமாதினு எந்த குஞ்சி குசுமானும் இங்கர்ந்து அங்கப் போவக் கூடாது.." தீர்மானமாகச் சொல்லிவிட்டார் நீதிமணி.

"நல்லது நடக்கறப்போ காரியம் கருமாதினு எதுக்கு பேசற..? அந்த வாய்ல புத்து வந்து.. கொத்து கொத்தா பூச்சிதாங் உதுரும்.. நாம்ப பெத்தது கண்ணாலத்ததாங் பாக்க குடுப்பன இல்ல.. பேத்தி கண்ணாலத்தயாவது போயி கண்ணு குளுர பாத்தா இன்னா..?" என்று கத்தினாள் திருவள்ளி.

"யாருக்குனா அப்டி ஒரு நெனப்பு இருந்து... இங்கிர்ந்து போனா.. அப்பறமா இந்த ஊட்டுப் பக்கமே திரும்பி வரக் கூடாது.."

அதைக்கேட்டதுமே கப்சிப் என அடங்கிவிட்டாள்.

ஒரு வாரமாக வீட்டில் யாருமே பேசிக்கொள்ளவில்லை. சுடுகாட்டில் இருப்பது போல ஒரே சூன்யம். பச்சை நரகம்.

கல்யாணத்துக்கு இரண்டு நாட்கள் இருக்கும் போது, இவர்களின் வீட்டு வாசலில் வந்து நின்று சத்தமாக ஹாரன் அடித்தான் சந்திரசேகரன்.

தலைக்குக் குளித்து, பட்டுப்புடவைக் கட்டி, தலை நிறைய்ய கனகாம்பரமும் மல்லியும் வைத்து தயாராக இருந்தாள் திருவள்ளி.

அதுவரை அவளை சரியாக கவனிக்காத நீதிமணி அப்போதுதான் உற்றுப் பார்த்தார். கஜராஜனும் அவளை விசித்திரமாகப் பார்த்தான்.

"நானு எம் பேத்தி கல்யாணத்துக்குப் போறங்.." வடக்குச் சுவரைப் பார்த்து உறுதியான குரலில் சொன்னாள்.

சட்டென எழுந்தான் கஜராஜன். எறவானத்திலிருந்த வெட்டுக் கத்தியை உருவினான்.

குறுக்கில் கைகளை நீட்டியபடி ஆவேசமாக அவன் முன்னால் நின்றாள் திருவள்ளி.

"மொதல்ல என்ன வெட்டிட்டு அப்பறமா அவன வெட்டுடா.."

அதிர்ந்து போனான் கஜராஜன். வாய் உலர்ந்து, நாக்குக் குழறப் பார்த்தார் நீதிமணி.

சந்திரசேகரன் தனது சட்டைப் பையிலிருந்து ஒரு முகக்கவசத்தை எடுத்து திருவள்ளியிடம் நீட்டினான். அதை வாங்கி காதுகளில் மாட்டி முகத்தில் படரவிட்ட திருவள்ளி, நிதானமாக ஏறி அவனது வண்டியின் பின் இருக்கையில் உட்கார்ந்தாள். விருட்டென கிளம்பி விட்டது வண்டி.

அதிர்ச்சியோடு திண்ணையில் உட்கார்ந்து விட்டார் கிழவர். பித்துப் பிடித்தவன் போல நின்றான் கஜராஜன். அவன் மனம் கிறுகிறுத்தது. வீட்டுக்குள் போய் படுக்கையில் விழுந்தான்.

அடுத்த ஒன்றரை மணி நேரம் கழித்து அவனது கைப்பேசி ஒலித்தது. எரிச்சலோடு எடுத்து "ஹலோ.." என்றான்.

அவன் அம்மா திருவள்ளி செத்துப் போய்விட்டதாக யாரோ சொன்னார்கள். அப்படியே விக்கித்துப் போய் கீழே சரிந்தான்.

மறுநாள் காலையில்தான் பிணத்தைக் கொடுத்தார்கள். கஜராஜனும் நீதிமணியும் தலையில் அடித்துக்கொண்டு அழுதனர். எதுவுமே பேசாமல் பேய்ப் பிடித்தவனைப் போல நின்றிருந்தான் சந்திரசேகரன்.

"எங்கம்மாவ ஏமாத்தி கூப்டுகினு வந்து.. அட்ச்சி சாவச்சிட்டு, பழய பகய தீத்துக்கினியாடா நாயே.." என சந்திரசேகரனைப் பார்த்து ஆவேசமாகக் கத்தினான் கஜராஜன்.

பளார் பளார் என அவனை அறைந்தான். அதே ஆத்திரத்தோடு காவல் நிலையத்துக்குப் போய் அவன் மீது கொலைக் கேசும் கொடுத்துவிட்டான்.

"நானு ரொம்ப வேகமா கூட வண்டிய ஓட்ல சார்.. மெதுவாதாங் போய்கினு இருந்தங்.. ஒரு சின்ன பள்ளத்துல ஏறங்கி ஏர்ச்சி வண்டி.. அதுல பேலன்ஸ் தவறி கீய வியந்திட்ச்சி.. தலைல சின்ன அடிதாங்.. ஒடனே நூத்தியெட்டுல ஆஸ்பத்திரிக்கி போயிட்டம்.. ஆனா இப்டி திடுதிப்னு போய்டும்னு நானு நெனைக்கவே இல்லியே சார்.." என காவல் நிலையத்தில் சொல்லிச் சொல்லி.. தலையில் அடித்துக்கொண்டு அழுதான் சந்திரசேகரன்.

மறுநாளே சந்திரசேகரனை கைது செய்து தொரப்பாடி சிறையில் அடைத்துவிட்டது போலீஸ். அதனால் பூங்கொடியின் திருமணமும் நின்று போனது. சந்திரசேகரனை ஜாமீனில் எடுப்பதற்கே பெரும் தொகை செலவானது. அதற்குப் பிறகு, இதோ.. மூன்று வருடங்களாக நீதிமன்றதுக்கு அலைகிறார்கள்.

ஊர்க்காரர்கள், உறவுக்காரர்கள் என யார் யாரோ பேசிப் பார்த்துவிட்டனர். வழக்கை வாபஸ் வாங்கவே முடியாது என பிடிவாதமாக நிற்கிறான் கஜராஜன்.

"அவன தூக்குல ஏத்தாம உடமாட்டங்.." என்று சபதமே போட்டான்.

நீதிமன்றத்துக்கு வருகிற ஒவ்வொரு முறையும் சௌந்தரி அழுத அழுகையைப் பார்த்தவர்கள் தீயில் எரியும் கற்பூரமாய்க் கரைந்தனர். ஆனால்,

கஜராஜன் மட்டும் கரையவேயில்லை.

"டே கணே.. நானு இன்னாடா பாவம் பண்ணங்.. நாம் பெத்தது அங்க தாலி ஏற வயி இல்லாம அம்போனு நிக்கிது.. இங்க எந்தாலிய அறுத்து மூலியாக்கணும்னு நீ கருவிகினு நிக்கற.. எப்டினா எனுக்கு தாலிப் பிச்ச குடு சாமி.." என அவனது கைகளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு எத்தனையோ முறை கதறிவிட்டாள் சௌந்தரி.

ம்கூம். அவனுக்கு மனசு இரங்கவே இல்லை.

கடந்த மாதம் சாட்சி சொல்ல முதல் முறையாக கூண்டில் ஏறினான் கஜராஜன். எதிரில் சந்திரசேகரனைப் பார்த்தும் அவனது ஆத்திரம் தலைக்கேறிவிட்டது. அவனை உதைப்பதற்காக கூண்டிலிருந்து இறங்கி தபதபவென ஓடினான். காவலர்கள் சுதாரித்துக்கொண்டு அவனை மடக்கிப் பிடித்தனர்.

"கோர்ட்ல இப்டிலாம் கலாட்டா பண்ணா ரிமாண்ட் பண்ணிடுவங்.." என கடுமையாக எச்சரித்தார் நீதிபதி.

"அம்மா மேல அவருக்கு ரொம்ப பாசம் யுவர் ஆனர்.. திடீர்னு அவங்க செத்துட்டதனால ரொம்ப அப்சட் ஆய்ட்டாரு.. நானு பக்குவமா சொல்லி இவருக்கு புரிய வைக்கிறங் யுவர் ஆனர்.." என நீதிபதியிடம் வேண்டிக்கொண்டார் அரசு வழக்கறிஞர்.

அதனால்தான் மீண்டும் வாய்தா போடப்பட்டது.

கொலை நடந்ததை நேரில் பார்த்த சாட்சி எதுவும் இல்லை. அதனால் இந்த கேஸ் நிற்காது என சந்திரசேகரன் தரப்பு வழக்கறிஞர் தைரியம் சொல்லிக் கொண்டிருந்தார்.

ஆனால்,இவர்களுக்குள் முன் பகைஇருந்ததையும் சம்பவத்தன்று இவர்களுக்குள் சண்டை நடந்ததையும் கஜராஜனின் சாட்சி உறுதிப்படுத்திவிட்டால் கேஸ் சிக்கலாகிவிடும் என்றும் பயமுறுத்தினார்.

"வண்டிலயிர்ந்து தானா விய்ந்துட்டாங்கனு சொல்லிடு.. அது மட்டும் போதும்டா கணே.. காலம் பூரா உங்காலடில விய்ந்துகினு கீறண்டா.." என கெஞ்சினாள், சௌந்தரி.

விபத்தால் மரணம் என்றால் அபராதம் கட்டினாலே போதும்.

நீதிபதி அவனை உற்றுப் பார்த்தார். பதட்டத்தில் கஜராஜனின் மார்பு வேகவேகமாகத் துடித்துக் கொண்டிருந்தது. முகத்தில் சலசலவென வியர்வை.

"என்ன படிச்சிருக்கீங்க.." அவனிடம் பொறுமையாக கேட்டார் நீதிபதி.

"பன்னண்டாவது அய்யா.."

"அரசாங்க வக்கீல் கேக்கறதுக்கு மட்டும் பதட்டப்படாம பதில் சொல்லுங்க.." என்றார்.

சரியெனத் தலையாட்டினான்.

"ம்.. இப்ப கேளுங்க.." என அரசு வழக்கறிஞரைப் பார்த்து உத்தரவிட்டார் நீதிபதி.

"சம்பவத்தன்னிக்கு என்ன நடந்துதுனு கரக்டா சொல்லுங்க.." என்று கஜராஜனைப் பார்த்துக் கேட்டார் அரசு வழக்கறிஞர்.

"அன்னிக்கி வெள்ளிக்கிழம.. காலைல பதினொரு மணி இருக்கும்.."

"என்ன தேதி..?"

"பதினெட்டாம் தேதி.. ஏப்ரல் மாசம்.." தட்டச்சு டப்டப்டப்பென அடித்துக் கொண்டிருந்தது.

"அந்தாளு எங்கம்மாவ கூப்டுகினு போவ எங்கூட்டுக்கு வந்தாங்.. எங்கம்மாவும் இவன நம்பி களம்பனாங்க.. அத நாங்க எதிர்பார்க்கவே இல்ல.. அதனால அவங்கூட சண்ட போட்டம்.. அதயும் மீறி வண்டில ஏத்தி கூப்டுகினு போனாங்.."

அவன் சொல்கிற ஒவ்வொரு வார்த்தையையும் எதிர் வக்கீல் உன்னிப்பாக கேட்டுக் கொண்டிருந்தார்.

"அவங்க களம்பிப் போன ஒன்ற மணி நேரம் கயிச்சி எனுக்கு போன் வந்துச்சி.."

"யாரு பண்ணது..?"

"தெரில.."

"என்ன சொன்னாங்க..?"

"எங்கம்மா செத்துட்டதா சொன்னாங்க.."

"எப்டி செத்தாங்கனு தெரிமா..?"

எல்லோரும் அவனையே உற்றுப் பார்த்தனர். கஜராஜன் தலையைத் திருப்பி வாசலில் நின்றிருந்த சௌந்தரியைப் பார்த்தான். சௌந்தரியும் கண்களில் நீர் வழிய வழிய அவனைப் பார்த்தாள்.

"எங்கம்மா போவும் போது மூஞ்சில மாஸ்க் போட்டுகினு போனாங்க.."

அரசு வழக்கறிஞர் புருவங்களை உயர்த்தியபடி அவனைப் பார்த்தார்.

"இத உங்க ஸ்டேட்மென்ட்ல சொல்லலியே.."

"அப்ப அது நாபகம் வர்ல.."

"சரி.. சொல்லுங்க.."

"வண்டில போவும் போது காத்து கொஞ்சம் வேகமா அட்ச்சிகீது.. அப்ப மூஞ்சில இருந்த மாஸ்க்கு

கெய்டிகினு காத்துல பறந்து கீது..

இப்போது நீதிபதியும் அவனை உற்றுப் பார்த்தார்.

"காத்துல பறந்த மாஸ்க்க புடிக்கறதுக்கு சட்னு கைய நீட்டி கீறாங்க.. அதனால பேலன்ஸ் தவறி கீய விய்ந்துட்டாங்க.."

அரசு வழக்கறிஞருக்கு திடீரென தலை சுற்றியது. பிரதிவாதி கொலை செய்துவிட்டதாக புகார் கொடுத்துவிட்டு, இப்போது மாஸ்க்.. பறந்தது.. என கதை சொல்கிறானே என அவனை அதிர்ச்சியோடு பார்த்தார்.

புகார்தாரரான அரசு தரப்பு சாட்சியே பிறழ் சாட்சியாகிவிட்டால் கேஸ் நிற்காதே. எப்படியாவது அவனை மடக்க வேண்டும் என அவருக்குள் ஒரு ஈகோ துடித்தது.

"மாஸ்க்போட்டுகிட்டுபோனதாசொன்னீங்களே.. அது என்ன கலர் மாஸ்க்..?"

எல்லோரும் கஜராஜனையே உற்றுப் பார்த்தனர்.

"நீலக் கலர் மாஸ்க்.." என எவ்விதத் தடுமாற்றமுமின்றி சொன்னான் கஜராஜன்.

நீதிபதி அவனையே உன்னிப்பாகப் பார்த்தார்.

"குற்றவாளி கூண்ட்ல இருக்கறவரு உங்க அக்கா கணவர். அதனால அவரக் காப்பாத்த பொய் சாட்சி சொல்றீங்களா..?" என்று கேட்டார்.

"பொய் சாட்சி இல்லீங்க அய்யா.. மெய் சாட்சி.." என மிகவும் பணிவாகச் சொன்னான் கஜராஜன்.

அவன் அப்படிச் சொன்னதைக் கேட்டதும் சட்டென மனம் கசிந்துவிட்டது சௌந்தரிக்கு.

"எம்பொறப்பே.." என அங்கிருந்தே ஆவேசமாகக் கத்தியவள், கண்களாலேயே அவனை வாரி அணைத்துக்கொண்டாள்.

கவிப்பித்தன் <kavipithan71@gmail.com>

(15ஆம் பக்கத் தொடர்ச்சி)

வெளியே சென்றுவிட்டார். முழு நாளும் என் அம்மா அங்கே காவலில் இருந்தாள். ஆரம்பத்தில் அழுதபடி உட்கார்ந்திருந்த அவள் எழுந்து முன்னும் பின்னும் நடந்தாள். கண்ணீரைத் துடைத்துத் துடைத்து ஈரமாகிவிட்ட கைக்குட்டையை எடுத்து அங்கிருந்த நாற்காலியில் படிந்திருந்த தூசியைத் துடைத்துச் சுத்தம் செய்தாள். பிறகு அங்கிருந்த வாளியையும் துடைக்கும் துணியையும் எடுத்துத் தரையைச் சுத்தம் செய்தாள். அவள் இதைச் சொன்னபோது எனக்குத்திகிலேற்பட்டது. "எப்படி அவர்களுக்காக நீ அந்த அலுவலகத்தை இந்த மாதிரி சுத்தம் செய்யலாம்?" என்று கேட்டேன். அவள் சற்றும் சங்கடப்படாமல் சொன்னாள்: "பொழுதைக் கழிக்க நான் ஏதாவது வேலை இருக்கிறதா என்று பார்த்தேன். அந்த அலுவலகம் படு அழுக்காக இருந்தது. நல்ல வேளை, நான் ஆண்களுக்கான பெரிய கைக்குட்டையை இங்கிருந்து எடுத்துச் சென்றேன்."

அப்போதுதான் நான் தெரிந்துகொண்டேன், இம்மாதிரிக் காவல் நிலைய அவமானத்தைச் சந்திக்க நேர்ந்த போதும் அவள் அதைத் தனக்கு கௌரவம் தரும் விதத்தில் மாற்றிக்கொண்டாள் என்று. இதை நான் வார்த்தைகளில் படம் பிடித்த போது:

என் இதயத்தில் உறுதியாக நின்றிருந்த
ரோஜாவை நினைத்தேன்.
ஒன்றுக்கும் உதவாத சல்லிடையை ஒத்த ஆத்மாவையும்
மேலாளர் கேட்டார்:
யாருக்கு முக்கியத்துவம் என்று.
நான் சொன்னேன்:



தோலைக் காப்பதுதான்.
அவர் கூச்சலிட்டார்:
தோல் என்பது அசிங்கப்படுத்தப்பட்ட
பொதுப்புத்தியற்ற பட்டுக் கிழிசல்.

நான் அன்றும் இன்றும் என்றும் சர்வாதிகாரத்தினால் தங்கள் மேன்மையை இழந்தவர்களுக்காகச் சொல்ல விரும்புகிறேன் - கைக்குட்டை என்ற வார்த்தையுடன். இல்லாவிடில் இந்தக் கேள்வி: "உங்களிடம் ஒரு கைக்குட்டை இருக்கிறதா?"

கைகுட்டையைப் பற்றிய கேள்வி கைக்குட்டையைப் பற்றியது அல்ல, மாறாக அது மனிதர்களின் உச்சகட்ட தனிமை பற்றி இருக்குமோ?

---

ஹெர்த்தா முல்லர், ரொமானிய - ஜெர்மன் கவி.

"ஸிந்துஜா" <weenvy@gmail.com>

# அவளுக்குச் சில வேலைகள் இருக்கின்றன

## பழ.அதியமான்

தமிழணங்கு என்ன நிறம்? - மு. இராமனாதன்; பக்கங்கள் 176; விலைரூ. 170; வெளியீடு: பாரதிபுத்தகாலயம், 421அண்ணாசாலை, தேனாம்பேட்டை, சென்னை600018; தொலைபேசி: 044 24332424; மின்னஞ்சல்: thamizhbooks@gmail.com

*தமிழில் பத்திரிகைக் கட்டுரைகளைத் தொடர்ச்சியாக எழுதுகிறவர்களில் குறிப்பிடத் தகுந்தவர்களாக 20 பேர் இருக்கலாம். இது தொழில்ரீதியாகப் பத்திரிகைப் பணியில் இருப்பவர்களைத் தவிர்த்துவிட்டுப் பார்த்த கணக்கு. 'தினமணி' ஆசிரியர் ஏ.என். சிவராமன் காலத்தில் பத்திரிகை ஆசிரியர்களும் நிருபர்களும் மட்டுமே தலையங்கப் பக்கத்தில் எழுதி வந்தார்கள். ஐராவதம் மகாதேவன் ஆசிரியரான காலத்திலும் அதற்குப் பிறகும் தான் பத்திரிகையில் பணிபுரியாத சுயேச்சையானவர்கள் நடுப்பக்கக் கட்டுரைகளை எழுதத்தொடங்கினர். பல நாளேடுகளில் இன்றுவரை நடுப்பக்கக் கட்டுரைகளே கிடையாது. தமிழில் நான் அறிந்து தினமணியிலும் இந்து தமிழ் திசையிலும்தான் நடுப்பக்கக் கட்டுரை உண்டு. அது பத்திரிகையில் பணிபுரியாதவர்களுக்கும் வாய்க்கிறது. எனவே,40 ஆண்டுகளில் 20 பேர் உருவாகி இருப்பது, காலமும் வாய்ப்பு குறைந்த சூழலையும் ஒப்பிடுகையில் வருத்தமானது தான் என்றாலும், மோசமில்லை.*

*பத்திரிகைகளில் கட்டுரை எழுதுபவர்களில் இலக்கியம் எழுதுகிறவர், அரசியல் எழுத மாட்டார்; அரசியல் எழுதுபவர் விளையாட்டின் பக்கம் திரும்ப மாட்டார்; விளையாட்டு பற்றி எழுதுபவர், சமகால விஷயங்களைத் தொடவே மாட்டார். காரணம் பெரும்பான்மையோர் துறைசார் நிபுணர்கள். இப்படியான சூழல் நிலவும் தமிழில் மு.இராமனாதன் பரவலான தலைப்புகளில் எழுதும் கட்டுரையாசிரியராக இருக்கிறார். அ.முத்துலிங்கம் பற்றியும் அவரால் எழுத முடியும்; முல்லைப் பெரியாறு பற்றியும் தரம் குறையாமல் எழுத முடியும். இப்படிப் பல்துறை பற்றியும் சிறப்பாக எழுதும் மிகச் சில ஆளுமைகளில் தற்போதைக்கு மு. இராமனாதனை முதலாவதாகச் சுட்டலாம். தலைப்பை மட்டும் பார்த்துவிட்டுப் பக்கத்தைத் திருப்பிவிட முடியாதபடி எழுதும்,சமூகத்தின் அனைத்து பிரிவினருமே வாசிக்க முடிகிறபடி எழுதும், தரத்திலும் சுவையிலும் உயர்ந்து நிற்கும்படி எழுதும் மிகச் சிலரில் மு.இராமனாதன் முக்கியமானவர்.*



*நான்கைந்து ஆண்டுகளுக்கு முன் புத்தகக் காட்சியில் என்னுடன் பணிபுரியும் ஒருவரை (இவர் வாசிப்பவர்) மு.இராமனாதனுக்கு அறிமுகப்படுத்தினேன். அவர் உடனே,"ஹாங்காங்கில் பதிவு பெற்ற இந்தியப் பொறியாளர்தானே" என்றார். நேர் அறிமுகம் இல்லாமலேயே பத்திரிகை வாசகர்களிடையே பிரபலமானவர் மு.இராமனாதன்.*

*2005இல் தினமணியில் பால்வடியும் முகத்துடன் கட்டுரையை எழுதத் தொடங்கிய இராமனாதன் புத்தக உலகுக்கு அறிமுகமானது 2009இல். 'எனது பர்மா குறிப்புகள்' (காலச்சுவடு, 2009) என்ற முகமது யூனுஸ் என்பாரின் பர்மீய அனுபவங்களைக் கேட்டு, எழுதி, ஒரு நூலாக வெளியிட்டதன் மூலம் புத்தக உலகிற்குள் அவர் நுழைந்தார். அதற்கு முன்னால் 'இலக்கிய வெள்ளி' (ஹாங்காங் இலக்கியவட்டம், 2008) என்ற பெயரில் ஒரு நூலை வெளியிட்டிருந்தது, பின்னரே தெரிந்தது. அ.முத்துலிங்கத்தின் கிளாசிக் கதைகளைத் தொகுத்து அதை,'புவியீர்ப்புக் கட்டணம்' (காலச்சுவடு, 2022) என்ற பெயரில் வெளியிட்டார்.*

*அவரது பன்னாட்டுக்கட்டுரைகள் 'கிழக்கும் மேற்கும்' (காலச்சுவடு, 2022);பொறியியல் கட்டுரைகள்,'வீடும் வாசலும் ரயிலும் மழையும்' (பாரதி*



புத்தகாலயம், 2023);இலக்கியக் கட்டுரைகள்,'இது அ.முத்துலிங்கத்தின் நேரம்' (காலச்சுவடு, 2022)என்ற பெயர்களில் வெளிவந்துள்ளன. சமூகம் அரசியல் சார்ந்த இந்தப் பல்துறைக் கட்டுரைகள்,'தமிழணங்கு என்ன நிறம்?'என்ற தலைப்பில் நூலாகியுள்ளது. இது ஏழாவது நூலாகக் கணக்கில் சேர்கிறது.

சமூகம், கொரோனா, புலம்பெயர் தொழிலாளர், அரசியல், தேர்தல், பெண், அதிகாரம் என்னும் ஏழு தலைப்புகளில் 30 கட்டுரைகள் கொண்ட சுமார் 170 பக்கம் கொண்டநூல் இது.2018இலிருந்து 2023 வரையிலான ஆறாண்டுக் காலத்தில்அவர் எழுதி மின்னிதழ்கள்/ பத்திரிகைகள் ஆகியவற்றில் வெளிவந்த கட்டுரைகளின் ஒரு பகுதி இந்த நூல். (இன்னொரு பகுதி கல்வி,மொழி சார்ந்த கட்டுரைகள், 'ஆர்வெல்லின் ஆறு விதிகள்' என்ற தலைப்பில் தனி நூலாக ஆயிஷா நடராசன் அணிந்துரையுடன் பாரதி புத்தகாலயமே வெளியிடுகிறது.)

இந்தக் கட்டுரைகள் கடந்த 10 ஆண்டுகள் தமிழ்நாட்டு வரலாற்றின் அகவயமானசாட்சியங்கள். இக்கட்டுரைகளில் சரிபாதி மின்னிதழ்களில் வெளிவந்துள்ளன என்பது சமகால தமிழகத்தின் வளர்ச்சி பற்றிய புறவயமான சாட்சி. மீதி சரிபாதிக் கட்டுரைகள் அச்சு இதழ்களில் வெளிவந்தவை. இந்த விவரமே மின்னிதழ், அச்சிதழ் என்ற இரண்டுக்கும் இடையில் திகழும் தலைமுறையின் ஆசிரியர் இராமனாதன் (1959) என்பதைக் காட்டிவிடுவன. காலத்தின் கருவியைப் பயன்படுத்தாத சமூகம் தேங்கிவிடும் என்பது ஒரு ஜெர்மானியப் பழமொழி. கணினியில் எழுதி, மின்னிதழில்வெளியிடும் இராமனாதன் தேங்கி விடாதவர்.

30 கட்டுரைகளை வசதிக்காக ஏழு தலைப்புகளில் பிரித்திருந்தாலும் அரசியல் (அரசியல், தேர்தல், அதிகாரம்),சமூகம் (சினிமா, கொரோனா, புலம்பெயர்தல், பெண்) என இரண்டு வகைப்பாட்டிற்குள்நூலை அடக்கிவிடலாம்.இன்னும் சொன்னால் சமகாலம் பற்றிய கட்டுரைகள் என்னும் ஒரே தொடரால்கூட இந்த நூல் பொருண்மையைச் சுட்டலாம். எல்லாக் கட்டுரைகளின் தலைப்புமே நூல் தலைப்பாகும் சிறப்பைப் பெற்றிருப்பினும் ஏன் 'தமிழணங்கு என்ன நிறம்' தலைப்பானது என்றகேள்வி பிறக்கலாம். தமிழரின் இதயம், மொழி என்றால் எந்த அளவில்துடிக்கும் என்பதை வெளிநாட்டில் இரண்டு பத்தாண்டுகள் வாழ்ந்தவராயினும் அறிந்தவர் இராமனாதன். 'நாடி வைத்தியர் இராமனாதன்'. தமிழர்களை நூல் பக்கம் கட்டி இழுக்கத் தலைப்பானாள் தமிழணங்கு.

பல கட்டுரைகளின் தலைப்புகள் கேள்விகளாக அமைந்துள்ளது. ஏன் என்று அடுத்து கேள்வி பிறக்கலாம். உள்ளடக்கத்தைச் சரியாக வெளிப்படுத்தும் தலைப்புகள் வைக்கப்பட்டிருக்கின்றன என்பது பதில். ஏறக்குறைய எல்லாக் கட்டுரைகளுமே விவாதத்தன்மையில் அமைந்தவை. இரு தரப்பு வாதங்களையும் முன்வைப்பவை அல்லது விளக்குபவை. அவற்றைப்

பிறர் அனுபவங்களில் அல்லது தன் அனுபவங்களில், ஆய்வுத்தரவுகளில் அலசி, அவரது தீர்ப்பை முடிவாக அல்லாமல் பார்வையாகத் தருபவை.

கொரோனா என்றதலைப்பின்கீழ் அமைந்த நான்கு கட்டுரைகளும் ஏறக்குறையச் சொந்த அனுபவங்களின் மூலம் பொது அனுபவத்தைப் பதிப்பவை. தமிழ்நாட்டுப் பொதுச் சுகாதாரக் கட்டமைப்பைச் சாதகமாகக் காட்டுவது கட்டுரைகளின் ஒட்டுமொத்த பார்வை. கொரோனா பற்றித் தமிழ்க் கவிதைகள் பெருக்கெடுத்த மாதிரி அது பற்றிப் பல கட்டுரைகளும் பிறந்தன. அக் கட்டுரைகளில் (என் கட்டுரையான 'மரணத்துள் வாழ்ந்திருந்தோம்' உட்பட) இவரது கட்டுரை 80 மதிப்பெண் பெற்று முதன்மை இடத்தைப் பெறும் கட்டுரையாகும். தற்சார்பின்றி அதேசமயம் சொந்த அனுபவத்துடன் நிலைமையை விவரத்துடன் வெளிப்படுத்திய கட்டுரை அது.

'ஏன் வழங்க வேண்டும் உரிமைத்தொகை?'- உலக நாடுகளில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுத் தரவுகளைக் கொண்டு எழுதப்பட்ட தமிழ்நாடு அரசின் செயல்பாட்டை ஆதரிக்கும் சிறந்த கட்டுரையாகும். வட இந்தியத் தொழிலாளர் நம் பகுதிகளில் எதிர்கொள்ளும் பிரச்சனையை அனுதாபத்துடன் பார்க்கின்றன புலம்பெயர் தொழிலாளர்கள் பற்றிய கட்டுரைகள். பிரச்சனையைத் தீர்ப்பதற்கு முதல்படியாக அவர்களைப் பற்றிய விவரங்களைச் சேகரிக்க வேண்டும் என்கிறார். இக்கருத்து அவர்களுக்கு எதிராகத் தமிழ்நாட்டில் சில பிரிவினரிடம் இருந்து வரும் எதிர்நிலைப் பட்டதன்று. பிற கட்டுரைகளிலும் ஆய்வு விவரங்களின் தேவையை வலியுறுத்துகிறார்.

பரந்த உள்ளடக்கம் இராமனாதனின் பலங்களுள் ஒன்று. 'சார்பட்டா பரம்பரை' பற்றியும் எழுதுவார்; இந்திய மக்கள் தொகை பற்றிய ஐக்கியநாடுகள் சபையின் அறிக்கைகளையும் அதன் மீதான இந்தியாவின் எதிர்வினைகளையும் தொடர்ந்து சென்று எழுதுவார். கண்ணதாசனும் அவர் கட்டுரைகளில் வருவார்; ஜார்ஜ் ஆர்வெல் வந்து போவார்; அருந்ததி ராய் எட்டிப் பார்ப்பார்; பாரதி குடித்தனமே இருப்பார். நாடாளுமன்றத்தின் புதிய கட்டிடம் பற்றியும் வாசிக்கிறார்; 'கிள்ளிப்போட்டால் விளக்கெரியும்' என்ற கிராமத்துப் பெண்ணின் பேச்சையும் கவனிக்கிறார். பொறியியல் முதல் அரசியல் உள்ளிட்டு பண்பாடு, இலக்கியம் என விசாலமான பொருள்களில் பத்திரிகை நடையில் எழுதும் தமிழ் எழுத்தாளர் என்று இராமனாதனை விளக்கலாம். எவ்வளவு விரிந்து பரந்து எழுதினாலும் இராமனாதனின் கால்கள் மண்ணில்தான் பாவி நிற்கின்றன. அது வலிந்து கொண்ட கரிசனம் அன்று.

இராமனாதன் தேர்ந்துகொள்ளும் உள்ளடக்கச் சிறப்பை அடுத்து, சொல்லும், சொல் முறையும் அவரது தனித்துவமான அம்சங்கள் எனலாம். தேர்ந்தெடுத்த சொற்களை மட்டும்தான் பயன் கொள்வார். 'வந்த ஆளை வைத்துக்கொண்டு வேலை வாங்குவது' அவர் முறையல்ல. அவரது சொற்களும் தொடர்களும் பெரும்பான்மையும் இலக்கியத்தில் புரட்டி எடுத்த சொற்கள், தொடர்கள். அச்சொற்களில் புரண்ட இலக்கியத்தின் மணம் வீசும். ஆனால், அது அதே மணம் அல்ல. புதிய சுவையை அவை தரும். பார்வைக்கு பழையன; உணர்வில் நவம் என ஒளிர்பவை.

இரண்டு சான்றுகள்: ஏழைகள் சாம்பலான மும்பையில் நிகழ்ந்த ஒருதீவிபத்தின் பின்விளைவை விவரிக்கிறார். அந்த மாபெரும் துக்கத்தைச் சில நாட்களில் மக்களும் பத்திரிகைகளும் அரசும் கடந்து போயின என்பதைச் சொல்லும் இடத்தில், 'அவர்களது தீனக் குரல் அடுத்தடுத்த நாட்களில் தேய்ந்து போனது' என்று எழுதுகிறார். அங்கே குரல் என்றே எழுதி இருக்கலாம். ஏனெனில், அடுத்தடுத்த நாட்களில் தேய்ந்து போனது என்று தொடர்ந்துவரும் சொற்களே அவர் விரும்பிய அவல உணர்ச்சியை வாசகரிடம் ஏற்படுத்தி இருக்கும். ஆனால், தீனக்குரல் என்று உச்சரித்து அந்த வாக்கியத்தை உணர்ச்சிகரமானதாக்கி விடுகிறார் இந்தத் தீன கருணாகரன்.

அதிகக் கூலி கேட்கத்தெரியாதவர்கள் என்று எழுதலாம். ஆனால், 'கூலி மிகக் கேட்கத்தெரியாதவர்' என்று எழுதும் போது பாரதியின் சேவகன் நம் கண் முன்னால் நிற்கிறான். தமிழ் இலக்கியம் அல்ல ஆங்கில இலக்கிய வரிகளும் அவரது கட்டுரைகளில் போகிறபோக்கில் வரும். 'அனைவரும் சமமானவர்கள், சிலர் கூடுதல் சமமானவர்கள்', 'சின்ன விஷயங்களின் கதை' அவற்றுள் சில.

இந்தக் கட்டுரைகளை இதழ்களில் வெளிவந்த சமயத்திலேயே படித்திருக்கிறேன் என்றாலும் முன்னுரைக்காக மீண்டும் படித்தேன். நூலின் ஒவ்வொரு சொல்லும் தொடரும் இலக்கிய வரிகளை நினைவுபடுத்திக்கொண்டே இருந்ததால் இதழ்கள் முறுவலில் இருந்துகொண்டே இருந்தன. பக்கத்தில் இருந்தவர் என்னை இளிச்சவாயன் என்று நினைத்திருக்கலாம். ஆனால், இதை இராமனாதன் எழுதினால் புன்னகை மன்னன் என்றோ குமிண்சிரிப்பு என்றோ குறித்திருப்பார். எதையும், யாரையும் புண்படுத்தாமல் இராமனாதனால் தன் கருத்தைக் கடத்தி விட முடியும்.

ஒப்பிடாமல் ஒன்றை விளக்கவே முடியாதா என்று அடிக்கடி கேட்பார் என் ஆய்வு வழிகாட்டி. இயலவில்லையே என்பதுதான் என் பதில். முடிந்திருந்தால் உவம உருபுகளே தமிழில் தோன்றியிருக்காதே! ஒப்பிடும்போதுதான் உயரமும் பருமனும் அதைப் போன்ற அம்சங்களும் எளிய மனத்திற்குள் பதிகின்றன. எதையும் ஒப்பிட்டு விளங்க வைப்பதில் விற்பன்னராக விளங்குகிறார் இராமனாதன். அந்த ஒப்பீடு ஆய்வறிக்கையின்




தகவல்களைத் தாண்டி பெரும்பாலும் அவரது பட்டறிவு சார்ந்ததாகவும் இருக்கிறது. பொதுவாக சீனா, குறிப்பாக ஹாங்காங். இப்படி உலக அனுபவங்களைச் சுட்டி எழுதுகிறவர்கள் குறைவு தமிழில். இவர் போன்று இரு மொழிகளில் எழுதும் உலக அனுபவமுள்ள ஆளுமைகள் மிகக் குறைவு. சமகாலத் தமிழ்நாட்டு அறிஞர்கள் பெரும்பாலும் புத்தகங்கள் மூலமே உலகை அறிந்தவர்கள்; இன்னும் சிலர் பயணங்கள் மூலம் உலகை அக்குவேறு ஆணிவேறாகக்கூடப் பேசத் தெரிந்தவர்கள். ஆனால், இராமநாதனின் அனுபவம் வாழ்ந்து பெற்றது. அதனால் கூடுதல் தெளிவாக இருக்கிறது. பயணங்களால் கிடைக்கும் அனுபவங்கள் நுரை போன்று அமைந்து விடவும் வாய்ப்பு உண்டு. பயண அறிவல்ல பட்டறிவு.

சமூக ஊடகங்களில் வைரலாக ஒரு விஷயம் பரபரத்துக் கொண்டிருக்கும். அதைக் குறித்து அச்சு ஊடக வாசிப்பாளர்கள் யாதொன்றும் அறியாதிருப்பார்கள். அவர்களுக்குச் சமூக ஊடக மொழியே ஒவ்வாமை தருவதாகஇருக்கும். அத்தகைய அச்சிதழ் வாசகர்களுக்குப் பால் நினைந்தூட்டும் தாய் இராமநாதன். அப்படி வந்த கட்டுரைகளில் ஒன்றே தமிழணங்கு. நவீன கலைஞன் சந்தோஷ் வரைந்த தமிழணங்கு சமூக வலைத்தளத்தில் வைதிக நெட்டிசன்களைப் பாடாய்ப்படுத்தியது. குறிப்பாக அணங்கின் கருப்பு நிறமும் கோபக் கோலமும். அந்த ஓவியத்தை ஆதரித்து அச்சு இதழான தமிழ் இந்துவில் இராமநாதன் வழக்கம்போல் உடனே எழுதினார். பல தமிழர்களின் நாடித்துடிப்பின் அச்சு வெளிப்பாடு அக்கட்டுரை. அதே சமயம் மரபார்ந்த வாசகர்களையும் இராமநாதன் சமாதானப்படுத்தினார். பாரதி என்கிற நிலாவைக் காட்டிச் சோறு ஊட்டினார். 'பேய் அவள் காண்' என்று பாரத அன்னையைப்(பாரதமாதா என்று நான் இன்று எப்படி எழுத முடியும்?) பேய் எனப் பாரதி பேசவில்லையா என்று கேட்டுச் சாந்தப்படுத்தினார். இதெல்லாம்கூடப் பயிற்சி உள்ளவர்களால் எழுதிவிட முடியும். ஆனால், கட்டுரையின் இறுதியில் இப்படி எழுதினார் இராமநாதன், அதுதான் முக்கியம். 'அவளுக்குச் சில வேலைகள் இருக்கின்றன; அதுவரை அவள் அப்படித்தான் இருப்பாள். பிறகு சீவிக்குழல் முடிப்பாள்' என்று எழுதி இருந்தார். இதுதான் தமிழர்கள் இராமநாதனைக் கொண்டாடி மகிழ்வதன் காரணம். கொள்கையும் அழகியலும் கூடிக் குழையும் இடம்.

அமத்தலான நகைச்சுவையும் அதைவிட அடங்கிய எள்ளலும் கட்டுரை முழுவதிலும் ஓடிக்கொண்டே இருக்கின்றன. இதைத் தீவிர இலக்கிய இதழ் கட்டுரைகளில் எழுத முடியும். பத்திரிகை எழுத்தில் அதைச் செய்வது கடினம். அதை இராமநாதன் செய்கிறார். ஒரு உதாரணம். ' எனது முதல் தேர்தல் தோல்வி' என்பது அப்படி ஒரு நகைச்சுவை வாசகம். அவர் பள்ளிக்காலத்தில் ஆதரவுப் பிரச்சாரம் செய்த வேட்பாளர் தேர்தலில் தோல்வி அடைந்ததைப் பற்றிய விவரிப்பு அது. வேட்பாளர் பெற்ற தோல்வியைப் பிரசாரம் செய்த தனக்கு நேர்ந்ததாக முன்னிலையைத் தழுவும் சொல் முறையும்அதில் தவழும் நகைச்சுவையையும் ரசிக்க முடிகிறது. இதைத்தான் வாசிப்பு சுவாரசியத்தைத் தரும் சொல்முறை என்கிறேன்.

இராமநாதனின் கட்டுரைகள் இன்றைய பிரச்சனைகளை, நேற்றைய திரையிலும் நாளைய மெய்நிகர் திரையிலும் வைத்துக் காட்டும் கண்ணாடிகள். வினைத்தொகை போல மூன்று காலத்தையும் காட்டுபவை; இயல்பாக ரசமானவை. ஒருபால் கோடாதவை எனினும் இடபால் சாய்வானவை.

ரசித்துப் படிக்க என்னைப்போல் பலர் உண்டு. தொடர்ந்து எழுதி தமிழ்ச் சமூகத்தை அறிவூட்டிக் கொண்டே இருங்கள். வாசகர்களிடம் உங்களைக் கொண்டுசேர்க்கும் பத்திரிகை நண்பர்களின் ஆதரவு அதற்கு இருந்து கொண்டே இருக்கட்டும். இறுதியாக ஒரு சொல்: அச்சு ஊடகத்தின் முகநூல் நீங்கள்!

---

'தமிழணங்கு என்ன நிறம்?'நூலுக்கு வழங்கிய அணிந்துரை

பழ.அதியமான்

தருமமிகு சென்னை-8

# சென்னையின் ஜுலேலால் உலகம்

சந்தியா நடராஜன்

கடந்தஆண்டு 2023 அக்டோபர் 18ஆம் நாள் சென்னை உயர் நீதிமன்ற வளாகத்தில் உள்ள பார் கவுன்சில் அரங்கத்தில் வழக்கறிஞர் சிகரம் செந்தில் நாதனின் 'குடியரசுத்தலைவர் - ஆளுநர் அதிகாரங்கள்' என்ற நூலின் வெளியீட்டு விழா நடைபெற்றது. விழாவுக்குச் சென்றிருந்த நான் உயர் நீதிமன்றத்துக்கு எதிரே என்.எஸ்.சி. போஸ் சாலையில் உள்ள தேநீர்க்கடை ஒன்றில் டீ குடிக்கப் போனேன். அங்கே நின்றுகொண்டிருந்த ஒருவர் என்னை அணுகி, "சார், எப்படியிருக்கீங்க - நான் உலாஸ் நகர் மோட்வானி.. ஞாபகமிருக்கா சார்" என்றார். அவரை என்னால் நினைவுகூர முடியவில்லை. இருபது ஆண்டுகளுக்கு முன்பு சென்னை பன்னாட்டு விமான நிலையத்தில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தைச் சொன்னார். கொஞ்சம் ஹிந்தி கொஞ்சம் ஆங்கிலம் என்று கலந்துகட்டிப் பேசலானார். அவர் பேசப்பேச, அவரை யாரென அடையாளம் கண்டுகொண்டேன்.

அப்போது நான் சென்னை விமான நிலையத்தில் சுங்க அதிகாரியாகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் விமானப் பயணியர் பட்டியல்களை ஆய்வு செய்து கொண்டிருந்த போது இந்தோனேஷியாவிலிருந்து மோட்வானி என்ற நபர் அடிக்கடி சென்னைக்கு வந்துபோவது தெரிந்தது. அது குறித்த விசாரணையில், மோட்வானி ஒவ்வொரு முறையும் முதல் வகுப்பில் பயணம் செய்வதும் புலனாகியது. 'மோட்வானி' எனது இலக்கானார். ஒவ்வொரு நாளும் சென்னை வரும் சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் விமானப் பயணியர் பட்டியலில் "மோட்வானி' என்ற பெயர் உள்ளதா என்று கண்காணித்து வந்தேன்.



ஓர் இரவில் மோட்வானி சென்னை விமான நிலையத்தில் வந்திறங்கினார். அவர் முதல் வகுப்புப் பயணி என்பதால் அவரது சூட்கேஸ்கள் சீக்கிரமே வந்துவிட்டன. அவற்றை எடுத்துக்கொண்டு கிரீன் சேனல் வழியாக வெளியேற முயன்ற மோட்வானியைத் தடுத்து நிறுத்தி விசாரித்தேன். தன்னை இந்தோனேஷியாவில் ஒரு தொழிலதிபராகக் காட்டிக்கொண்டார். அவரது சூட்கேஸ்களைத் திறக்கச் சொன்னபோது அவரது பேச்சும் உடல்மொழியும் மாறி, அவரைப் பம்பாயிலுள்ள 'உலாஸ் நகர்' பேர்வழியாகக் காட்டிக்கொடுத்தன.

அவர் கொண்டுவந்த இரண்டு சூட்கேஸ்களிலும் 'குடாங் கரம்' (KUDANG GRAM)என்ற இந்தோனேஷிய சிகரெட் கார்ட்டன்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. குடாங் கரம் உயர் ரகப் புகையிலையுடன் கிராம்பைச் சேர்த்துத் தயாரிக்கப்படும் சிகரெட். பொதுவாக இந்த சிகரெட்டைப் பெண்கள் விரும்பிப் புகைப்பார்கள். இது பம்பாயில் அதிகம் விற்பனையாகும் ரகம். சிகரெட்டுக்குச் சுங்க வரி கட்டி மாளாது. எல்லா சிகரெட்டுகளும் சுங்க சட்டத்தின் கீழ்க் கைப்பற்றப்பட்டன. விதி மீறலுக்காக அவர் மீது அபராதமும் விதிக்கப்பட்டது. மோட்வானி வெறுங்கையுடன் விமான நிலையத்தைவிட்டு வெளியேறினார். குறைந்த பட்சம் லட்சம் ரூபாய் நட்டமாகியிருக்கும்.

அந்த மோட்வானிதான் இருபது ஆண்டுகளுக்குப் பிறகு பாரிஸ் கார்னர் டீ கடையில் என்னைச் சந்தித்தவர். மோட்வானி ஒரு 'சிந்தி'. சிந்திக்காரர்கள் அடிப்படையில் வியாபாரிகள்; மென்மையானவர்கள்; பகைமை அறியாதவர்கள்; நட்புறவு



பேணுபவர்கள்.இந்தச்சந்திப்புக்குப்பிறகுகடந்தநான்கு மாதங்களில் தற்செயலாகப் பல சிந்திக்காரர்களைக் காண நேர்ந்தது. பல சிந்திக்காரர்களிடம் பேச நேர்ந்தது.

சென்னையில் மட்டும் குறைந்தபட்சம் 15,000 சிந்திக்காரர்கள் வாழ்கிறார்கள். இவர்களில் பெரும்பகுதியினர் இந்திய விடுதலையின்போது பாகிஸ்தானிலிருந்து அகதிகளாக இந்தியாவுக்கு வந்தவர்கள். இந்திய-பாகிஸ்தான் பிரிவினையின் போது நடந்த மதக் கலவரத்தால் புலம்பெயர்ந்து வந்து ஜோத்பூரில் அமைக்கப்பட்டிருந்த முகாம்களில் தங்கி, சென்னைக்கும் மற்ற பகுதிகளுக்கும் இடம் பெயர்ந்தவர்கள். அப்போது இந்திய சர்க்கார் இப்படி வந்தவர்களுக்கு 5000 ரூபாய் நிதி உதவி அளித்திருக்கிறது.

இந்த சிந்திக்காரர்கள் பாகிஸ்தானின் ஷிகார்புர், ஹைதராபாத் ஆகிய இரண்டு இடங்களிலிருந்து வந்திருக்கிறார்கள். இவர்கள் வாழ்ந்த இடங்களால், இரு பிரிவாகப் பகுக்கப்படுகிறார்கள். இரு பிரிவினரும் இந்துக்கள்; இரு பிரிவினரும் பேசும் மொழி சிந்து.

ஷிகார்புர் என்றால் சௌகார்புர் என்று பொருள். அதாவது செல்வபுரி. ஷிகார்புர் சிந்திகள், ஹைதராபாத் சிந்திகளைவிட, சமூகத்திலும் பொருளாதாரத்திலும் உயர்ந்தவர்களா என்றால் அதற்கு உறுதியான பதில் சொல்ல முடியாது.

‘சிந்திகள்’ இந்துகடவுள்களையே வழிபடுகிறார்கள். ஒரு சிலர் சீக்கியக் கோயிலான குருத்வாராவுக்கும் செல்வதுண்டு. ஹோலி, தீபாவளி, சிவராத்ரி ஆகிய மூன்று பண்டிகைகளும் இவர்களது மதம் சார்ந்த கொண்டாட்ட தினங்கள். சிவராத்ரி அன்று ‘பாங்கு’ என்றழைக்கப்படும் அபின் சௌகார்பேட்டை வட்டாரத்தில் ரகசியமாக விற்பனையாகும். யோகத்தில் இருக்கும் சிவனை வழிபடும் பக்தர்கள் ‘பாங்கு’ மூலம் யோக நிலை அடையலாம் என்று நினைத்திருக்கலாம். கொட்டைப் பாக்கு அளவுக்கு இரண்டு பாங்கு உருண்டைகளைப் பாதாம் பாலில் கலந்து அருந்துகிறவர் நிலமிசை நீடு வாழ்வோரோ இல்லையோ விண் ஏகி எண் திசையிலும் பறந்து மகிழ்ந்து திரிவர். மண்ணிறங்க நெடு நேரம் பிடிக்கும்.

சிந்திக்காரர்களுக்கு என்று தனிப்பட்ட ஒரு தெய்வம் உண்டு. அத்தெய்வத்தின் பெயர் ஜூலேலால். சிந்தி இன மக்களைக் காப்பதற்கென்றே கடலிலிருந்து மீன் மீது ஏறி வந்தவர் ஜூலேலால் என்று சொல்கிறார்கள். ஜூலேலாலின் தீவிர பக்தர்களில் ஒருவரான ஷ்யாம் நாராயணன் சென்னையில் வசித்து வருகிறார். சென்னை எழும்பூர் தமிழ்ச்சாலையில் அமைந்துள்ள ‘சிந்து சதான்’ சென்னை வாழ் சிந்திக்காரர்களின் சமூகக்கூடம். இதே வளாகத்தில் ஜூலேலாலுக்கான வழிபாட்டு இடமும் உண்டு.

கிரிதாரிலால் தியோமல் பிரகாஷ், சிந்தி சதானின் மேனாள் தலைவர்; செயலர். தொடர்ந்து இந்த

அமைப்பின் தீவிர செயல்பாட்டாளராக இருந்து வருகிறார். இணையகாலத் தலைமுறையைச் சார்ந்த சிந்திக்காரர்களிடையே சிந்தி கலாசார பண்பாட்டு எழுச்சி தலைதூக்க ஆரம்பித்துள்ளது. இந்துக்கள் ஒருவருக்கொருவர், "ஜெய் ராம்', 'ஜெய் பஜ்ரங்பலி' என்று சொல்லிக்கொள்வதுபோல சிந்தி இளைஞர்கள், 'ஜெய் ஜூலேலால்' என்று சொல்லத் தொடங்கியிருக்கிறார்கள்.

ஜூலேலாலின் பிறந்த நாள் ஏப்ரல் 9. இந்த நாளை 'செட்டி சந்' என்று விமர்சையாகக் கொண்டாடுகிறது சிந்தி சமூகம். ஐந்து வகையான பழங்கள் மாவு பிசைந்து அதில் ஏற்றிய தீபம் அரிசி, சர்க்கரை ஆகியவற்றைக் கொண்டு ஜூலேலாலுக்கு வழிபாடு நடைபெறும். பஜனை பாடல்களும் வழிபாட்டின் ஒரு பகுதி. எல்லாம் முடிந்தபின் ஏற்றிய தீபமும் படைக்கப்பெற்ற பழங்களும் அரிசி சர்க்கரை எல்லாமும் எந்தக் கடலிலிருந்து ஜூலேலால் வந்தாரோ அந்தக்கடலுக்கே அர்ப்பணிக்கப்படும். வழிபாட்டுத் தலங்களில் சர்க்கரைப் பொங்கல் வழங்கப்படும். இதை, 'தைரி' என்கிறார்கள் 'சிந்தி'கள்.

சிந்திகள் கொண்டாடும் இன்னொரு விழா, "லால் லோஹி' (Lal Lohi)அல்லது 'திரா மூரி' (Tiramoori). லால் லோஹி ஒரு அறுவடைத் திருவிழா. நமது போகிப்பண்டிகை போலப் பொங்கலுக்கு (வட இந்தியாவில் மகர சங்கராந்தி) முதல் நாள் நடைபெறும். இவ்விழாவில் சிந்திக்காரர்கள் தீ வளர்த்து ஆடிப்பாடிக் களிப்பர்; சுவையான உணவு உண்டு மகிழ்வர்.

சென்னையில் சிந்தி கல்வி அறக்கட்டளை கெல்லிஸ் பகுதியில் சிந்தி மாடல் ஸ்கூல் என்று ஒரு பள்ளியையும் நூம்பலில் சிந்திக் கல்லூரி என்று ஒரு கல்லூரியையும் நடத்தி வருகிறது.

தமிழ் நாட்டில் உள்ளவர்களுக்கு சிந்திகளுக்கும் மார்வாடிகளுக்கும் வித்தியாசம் தெரியாது. ஆனால், சுங்க அதிகாரிகள் 'சிந்திக்காரர்'களை எளிதில் அடையாளம் கண்டுகொள்வார்கள். 80களின் இறுதியில் பம்பாய் உல்லாஸ் நகரைச் சேர்ந்த சிந்திக்காரர்கள் அடிக்கடி சிங்கப்பூர் சென்று வெளிநாட்டுப் பொருள்களை வாங்கி வருவார்கள். 'சிந்தி' பெண்களும் இந்த 'பறக்கும் தொழிலில்' ஈடுபடுவார்கள். இவர்களின் பெயர்கள் எல்லாம் நிச்சானி, லால்வானி, சந்தானி, ஜூமானி என்றிருக்கும். இந்த 'னி' என்று முடியும் பெயர் கொண்டிருப்பவர்கள் பெரும்பாலும் பாகிஸ்தானின் ஹைதரபாத்திலிருந்து வந்தவர்கள் என்றொரு 'னி' சொன்னார்.

இவர்கள் மிகவும் கெட்டிக்காரர்கள். சிங்கப்பூரிலிருந்து வரும் உலாஸ் நகர் சிந்திகளின் சூட்கேஸைத் திறந்தால் அதில் நூறு வகையான பொருட்கள் இருக்கும். மஞ்சள் கயிற்றிலிருந்து மாஞ்சா கயிறு வரையிலும் உள்ளாடையிலிருந்து கொண்டை ஊசி வரையிலும் ரிப்பன் முதல் மேக்கப் கிட் வரையிலும் இல்லாத பொருள் ஏதுமில்லை என்ற வகையில் இருக்கும். பட்டியலிட்டால் அநுமார் வால் தோற்றுப்போகும். சுங்கத்தீர்வையைக் கணக்கிட ஒவ்வொரு பொருளின் விலையைத் தீர்மானிப்பதற்குள் சுங்க அதிகாரிக்குத் தலை சுற்றும். 'பையா பையா' என்று உலாஸ் நகர்க்காரர்களும் / காரிகளும் குழைந்து குழைந்து கருணை காட்டும்படி ஆயிரம் முகபாவம் காட்டுவார்கள். உலாஸ் நகர்க்காரர்கள் விற்கும் பொருள்களில் 'made by USA' என்று பொறிக்கப்பட்டிருக்கும். வாடிக்கையாளர்கள் ஏதோ அமெரிக்காவிலிருந்து வந்ததென நம்பிவிடுவார்கள். சுங்க அதிகாரிகளையோ போலீஸையோ எதிர்கொள்ளும்போது, "இவை வெளி நாட்டுப் பொருட்கள் இல்லை. அமெரிகாவில் தயாரானவையும் இல்லை. நாங்கள் தயாரித்தவை. அதாவது USAஎன்றால் Ulasnagar Sindhi Association"என்று விளக்கமளிப்பார்கள்.

உலாஸ் நகரில் இருந்து வரும் பெண் ஒருத்தி எப்போதும் ஒரு பாடலை முணுமுணுத்தபடியும், சில வேளைகளில் வாய்விட்டுப் பாடியபடியும் இருப்பாள். கேட்க இனிமையாக இருக்கும். அந்தப் பாடல் சிந்திக்காரர்களின் திருமண நிகழ்வுகளில் பாடும் பாடல் என்றாள். மரபார்ந்த அந்தப் பாடலுக்கு 'லாடா' என்று பெயராம்.

எனது வாழ்வில் சிந்திக்காரர்களை அறிந்ததும் அறிமுகமானதும் இப்படித்தான். தருமமிகு சென்னை பர்மாவிலிருந்து அகதிகளாய் வந்தவர்களுக்குக் கடற்கரைச் சாலையில் அபயமளித்து வளர்த்து எடுத்தது எனில், பாகிஸ்தானிலிருந்து வீடு வாசல் இழந்து காயங்களுடன் வந்த இந்த சிந்திக்காரர்களுக்கு சௌகார்பேட்டையில் கிடங்குத் தெருவிலும் மின்ட் தெருவிலும் வாழ்வாதாரம் தந்து அவர்களை வளமிக்கவர்களாக்கி, கெல்லிஸ் பகுதியிலும் புரசையிலும் குடி அமர்த்தியது.

சிந்திக்காரர்கள் முதன்மையாகத் துணி வியாபாரத்திலும் பைனான்ஸ் தொழிலிலும் கைதேர்ந்தவர்கள். இவர்கள் உங்கள் வீட்டு பூஜை அறை வரையில் தங்கள் தொழிலை விரிவுபடுத்தியிருக்கிறார்கள் என்றால் அது பொய் இல்லை. ஒவ்வொரு வீட்டிலும் பூஜை அறையில் விதவிதமான சாமி படங்கள் இடம் பெற்றிருக்கும் அல்லவா? அந்தச் சாமி படங்களை வெகு காலமாக அச்சிட்டு விற்பனை செய்து வரும் குடும்பம் ஒரு சிந்திக்காரரின் குடும்பமே. J.B.கண்ணா அன்ட் கம்பெனி என்பது அவர்கள் நிறுவனத்தின் பெயர். இன்றைய தலைமுறை வரை இத்தொழிலில் இடையறாது ஈடுபட்டிருக்கிறார்கள் கண்ணா குடும்பத்தினர். இவர்களுக்கு தேவராஜ் முதலியார் தெருவில் கடை இருந்தது.

தமிழக அரசின் மின்சார வாரியத் தலைவராகப்





அஜித் அன்னை சிந்தி இனத்தை சேர்ந்தவர்.

பணியாற்றிவரும்ராஜேஷ்லக்கானியும்இச்சமூகத்தைச் சேர்ந்தவர். சிந்தியைத் தாய் மொழியாகக் கொண்டு தமிழ் நாட்டில் நிலைத்துவிட்ட இச்சமூகம் தமிழ்மொழியிலும் ஆர்வம் காட்டி வருகிறது என்பதற்கு எனது நண்பர் செந்தூரம் ஜெகதீஷ் இருக்கிறார். 'செந்தூரம்' இவர் நடத்திய இலக்கிய இதழ். இவர் எழுதிய, 'கிடங்கு தெரு' என்ற தமிழ் நாவல் சிந்தி சமூகத்தின் வாழ்வியல் கூறுகள் நிறைந்த படைப்பு. ஓஷோவின் நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்திருக்கும்ஜெகதீஷின்வாழ்க்கை ஊடக உலகத்திலேயே பயணம் செய்கிறது.

இவர்கள் சிந்தி சமூகத்தின் அரிய விளைவு. ஆனால், சிந்திக்காரர்களின் ரத்தத்தில் கலந்து ஓடுவது வணிகம்; வணிகம்; வணிகம்.

நீண்ட இடைவெளிக்குப்பின் நான் சந்தித்த இன்னொரு சிந்திக்காரர் பிரேம். சென்னையின் பத்துப் பணக்காரர்களில் ஒருவராகப் பிரேம் இல்லாமல் இருக்கலாம். ஆனால், அவரது உடல் எடையில் சென்னை வாசிகள் அவரோடு போட்டியிட இயலாது. அதே அளவுக்கு அவர் தரும் அன்பும் குறைபடாது. எப்போதும் சிரித்த முகத்துடன் வரும் பிரேம் பிறந்து வளர்ந்தது சௌகார்பேட்டை தங்க சாலையில்தான். அவரது தாத்தா தீப்சந் கேரெஜ்மல் பாகிஸ்தானிலிருந்து, நமது சர்க்கார் கொடுத்த 5000 ரூபாய் நிவாரணத் தொகையுடன் சென்னை வந்தவர். தங்க சாலையில் ஒண்டுக்குடித்தனம். கிடங்கு தெருவில் துணி வியாபாரம். அவருக்கு மூன்று மகன்கள், ஒரு மகள். வேலூர், ஆம்பூர், திருச்சி, சேலம் உள்ளிட்ட நகரங்களுக்குப் பேருந்தில் சென்று அங்கிருக்கும் துணிக்கடைகளில் ஆர்டர் எடுத்து சப்ளை செய்வது அவரது தொழில். இன்று அவரது பேரன் பிரேம் பன்னாட்டு கூரியர் கம்பெனி ஒன்றை நடத்தி வருகிறார். ABCஎன்ற அவரது கூரியர் நிறுவனம் லண்டன் உள்ளிட்ட ஐரோப்பிய நகரங்களிலிருந்து புகழ்பெற்ற பத்திரிகைகளையும் புத்தகங்களையும் இந்தியாவில் உரியவர்களுக்குக் கொண்டு சேர்த்துவருகிறது. அவரது அலுவலகம் சிறியது. அலுவலகத்தில் அவரது அறையும் சிறியது. எவ்வித ஆடம்பரமும் இன்றி அமைதியகாச் செய்யல்படும் ABCகூரியரின் செயல்திறம் பிரமிக்க வைக்கும்.

1980களின் இறுதியில்தான் வெளி நாடுகளுக்கு விமானம் மூலம் கூரியர் சேவை தொடங்கியது. இந்தத் தூதஞ்சல் சேவை முதலில் சிங்கப்பூர், மலேசியா போன்ற அண்டை நாடுகள் அளவிலேயே இருந்தது. கூரியர்கள் அடங்கிய ஜம்போ பைகளை கார்கோவாக அனுப்ப முடியாது. சாதாரண விமானப் பயணியைப்போல கூரியர் கம்பெனியின் ஊழியர் ஒருவர் தினமும் சிங்கப்பூருக்குப் பயணம் மேற்கொள்ள வேண்டும். கூரியர் ஜம்போ பைகளை ஏர்லைன்ஸ் கவுண்டரில் Chekked - in Baggage-களாக அளிக்க வேண்டும்.முதன் முதலாக 'எஸ்கொயர் ஆன் போர்டு சர்வீஸஸ்' என்ற கம்பெனிதான் இந்தச் சேவையைத் தொடங்கி வைத்தது. 1990களில் கூரியர் வணிகம் வளர்ச்சி பெற்று 2000க்குப் பிறகு அசுர வேகத்தில் இயங்கத் தொடங்கியது. ஏறக்குறைய 15 ஆண்டுகளாகிறது கூரியர் கம்பெனிகளுக்கு என்று பன்னாட்டு விமான நிலையத்தில் தனித்தளம் உருவாக்கப்பட்டு. மீனம்பாக்கத்தில் உள்ள பழைய விமான நிலையம் கூரியர் டெர்மினலாக இன்று இயங்கி வருகிறது. பிரேமின் ABCகூரியர் நிறுவனம் இன்று கூரியர் வர்த்தகத்தில் முத்திரை பதித்து வருகிறது.

தமிழ்த் திரைப்பட உலகத்திலும் சிந்திக் காரர்களுக்கு ஓர் இடமுண்டு. சஞ்சய் என்ற சிந்திக்காரரைத் தெரியாத திரைப்படத் தயாரிப்பாளர்களோ இயக்குநர்களோ இருப்பதற்குச் சாத்தியமில்லை. சினிமா ஃபைனான்சியர்களில் ஒரு மந்திரச் சொல் சஞ்சய். எந்த டாம்பீகமும் இல்லாத மனிதர். ஏதாவது பொது நிகழ்ச்சிகளில் எப்போதாவது சந்திப்பதுண்டு. ஒரு சாதாரண மனிதரைப்போலவே பழகுவார். கூடவே அழைத்துச் சென்று அருகமர்ந்து உண்பார். சிந்திக்காரர்களின் இயல்பான எளிமையான வாழ்வுக்கு சஞ்சய் ஒரு



நேரடி சாட்சி.

1989இல் நடிகர் அஜித் நடிகராகவில்லை. ஈக்காட்டுத்தாங்கலில் 'வெஸ்சர்ஸ்' என்றொரு 100% ஏற்றுமதி நிறுவனம் இயங்கி வந்தது. அதில்தான் அஜித் பணிபுரிந்து வந்தார். எனது நண்பர் குணாளன் அந்த நிறுவனத்தின் செயல்பாடுகளைக் கண்காணிக்கும் சுங்க அதிகாரியாக அந்நிறுவனத்தில் நியமிக்கப்பட்டிருந்தார். அவரைப் பார்க்கச் செல்லும்போதெல்லாம் 'எதிர்கால நடிகர் அஜித்' இன்றுநாம்திரையில்காணும்அதேஉடல்மொழியுடன் கனிந்த முகத்துடன் செயல்பட்டுக்கொண்டிருந்ததைக் கண்டிருக்கிறேன். அஜித்தின் அன்னை சிந்தி சமூகத்தைச் சேர்ந்தவர்.

அண்ணா சாலையிலும் ரிச் தெருவிலும் பல சிந்திக்காரர்கள் எலெக்ட்ரானிக் கடைகளை நடத்தி வருகிறார்கள். ஸ்டீரியோவிஷன் ஹரிஷ் குறிப்பிட்டுச் சொல்லக்கூடியவர்.

சௌகார்பேட்டையிலும் ஹரிஷ் ட்ரேடர்ஸ், சோனா டெக்ஸ்டைல்ஸ் போன்ற பல துணிக்கடைகளின் உரிமையாளர்கள் சிந்திகாரர்கள்தான்.

ராம் சந்தானி என்று ஒரு 'சிந்தி' எஸ்,ஐ,சி ஏஜென்ட் ஒருவர் இருந்தார். நான் சுங்க இல்லத்தில் சேர்ந்த புதிது. ஒரு சின்ன சூட்கேஸுடன் அநேகமாக தினமும் சுங்க இல்லம் வந்துபோவார். எல்லோராலும் நேசிக்கப்படுகிற மனிதராக இருந்தார். பார்ப்பவரிடத்தில் எல்லாம், 'pay me hundred; I will make it double'என்று சொல்லித்தான் உரையாடத்தொடங்குவார். முதுமையிலும் தளராது உழைக்கும் சிந்திக்காரர்களின் குணத்தை அவரிடம் கண்டிருக்கிறேன். காசைப் பெருக்கும் வழி தெரிந்த சிந்தி சமூகத்தின் வார்ப்பு ராம் சந்தானி.

சிந்திகளிடம் இருந்து நாம் கற்க வேண்டிய பாடம்: வீழ்ந்தாலும் எழலாம்; சக மனிதர்களிடம் நல்லுறவு; நகைமுகம்; இன்சொல்; இருக்கும் இடம் தெரியாமல் இருப்பது.

Strangers are my lovers.

(தொடரும்)

சந்தியா நடராஜன்
<sandhyapathippagam@gmail.com>

## தமிழில் சிறந்த நவீன கலை இலக்கிய சமூக மாத இதழாக விளங்கும்



# அம்ருதா மாத இதழ்

* தனி இதழ் -ரூ.30/-
* ஆண்டு சந்தா -ரூ.330/-
* 2 ஆண்டு சந்தா -ரூ.660/-
* 5 ஆண்டு சந்தா -ரூ.1,560/-
* ஆயுள் சந்தா -ரூ.6,000/-




**மாதம் தோறும் சந்தாதாரர்களுக்கு வீடு தேடி வரும்**

AMRUDHA PUBLICATION



**Digital** முறையில் பணம் செலுத்திய விபரம் மற்றும் முகவரியை மின்னஞ்சல் மூலம் தெறிவிக்கலாம்

சந்தா தொகையை வங்கி கணக்கில் செலுத்திட Amrudha publication, Indian Bank, Nandhanam Branch, CA/No. 6088000674, IFSC Code: IDID 000N078

அம்ருதா பதிப்பகம், எண். 1 கோவிந்த ராயல் நேஸ்ட், 3வது மெயின் ரோடு, 2வது விரிவாக்கம், சி.ஐ.டி நகர் (கிழக்கு), நந்தனம், சென்னை - 35
தொலைபேசி: 044-24353555, 9444070000.மின்னஞ்சல்: info.amrudha@gmail.com

## மஞ்னும்மல் பாய்ஸ்

# எது சாத்தானின் சமையலறை?

### கே. பாலமுருகன்

மலையாள சினிமாவில் மட்டுமல்லாது தமிழ்ச் சினிமாவிலும் குடித்து விட்டு ஆடித் திரியும் இளைஞர்கள், ஊர்த் திரிந்து இறுதியில் திருந்துவது போன்ற பாணியில் எடுக்கப்பட்ட படங்கள் ஏராளம் உள்ளன. பல தமிழ்ப் படங்களில் கதாநாயகர்கள் படத்தின் ஆரம்பத்தில் ஊதாரித் தனமாகக் குடித்துவிட்டுச் சுற்றுவதையும் பெற்றோர்கள் வசைப்பாடிக் கொண்டிருப்பதையும் பார்த்துவிட்டோம். காலையில் பெற்றோரின் காலில் விழுந்து வணங்கிவிட்டு சென்று, மாலையில் குடித்துவிட்டு வந்து அவர்களை அடித்துத் துன்புறுத்துவதை, வடிவேலுவின் நகைச்சுவை காட்சியாக நாம் அசராமல் பார்த்துச் சிரித்துக்கொண்டேதான் இருக்க வேண்டியுள்ளது. இங்ஙனம் குடித்துவிட்டு அயோக்கியத்தனங்களைச் செய்வதையும் விதிமுறைகளை மீறுவதையும் இளைஞர்களின் நியாயமான கொண்டாட்டம் என நிறுவுவது தவறான ஒரு வழித்தடத்தைக் காட்டிவிடக்கூடியது. ஆனால், 'மஞ்னும்மல் பாய்ஸ்' அதற்கான விளைவைப் படத்தின் இரண்டாவது காட்சியில் வைப்பதன் வழி சமன்நிலையைத் தக்க வைக்க ஓரளவில் முயன்றுள்ளது.

கொச்சினில் வசிக்கும் நண்பர் குழு ஒன்று பக்கத்து நாடான தமிழ்நாட்டிலுள்ள கொடைக்கானலுக்குச் செல்லத் திட்டமிடுகின்றனர். வாழும் காலத்தில் மகிழ்ச்சியின் உச்சத்தில் தத்தளித்து விடுவதுதான் இந்த நண்பர்கள் குழுவின் நாட்டமாக உள்ளது. படத்தில் முதல் சில காட்சிகளில் இவர்கள் குடித்துவிட்டு நடனம் ஆடுவதையும் திருமண மேடையில் ஏறி வம்பிழுப்பதையும் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுப் பின்னர் சேர்ந்துகொள்வதையும் காட்டி இவர்கள் மிகவும் சாதாரண மனிதர்கள்தான் என்று இயக்குநர் நிறுவுகிறார்.

திட்டமிட்டப்படி இந்த நண்பர்கள் குழு கொடைக்கானலை நோக்கி தமிழ்நாட்டிற்குள் வருகிறார்கள். கொடைக்கானலில் குடித்துவிட்டு ஊர் சுற்றுகிறார்கள். பின்னர் மூனாருக்குச் செல்லும் முன் குணா குகைக்குச் செல்லலாம் என முடிவெடுக்கின்றனர். அங்கு தடை செய்யப்பட்ட குகை பகுதிக்குள் நுழைகின்றனர். பெரிய பாறைகள் குறுகியும் விரிந்தும் குகைக்குள் கிடக்கின்றன. அதிலுள்ள ஒரு பாறையில் தங்கள் குழுவின் பெயரை எழுதுகிறார்கள். அப்பொழுது திடீரென அக்குழுவிலிருந்து சுபாஷ் என்பவன் ஏறக்குறைய *900* அடி ஆழமுள்ள அபாயகரமான குழியில் விழுந்து விடுகிறான். அவனை அந்த நண்பர் குழுப் போராடி மீட்கிறார்கள்.

இதுதான் இப்படத்தின் கதை.

இதுபோன்ற கதைகளை நாம் நிறைய பார்த்திருப்போம். 'அறம்', 'சிங்காரச் சிட்டு' போன்று மீட்புத்தொடர்பான படங்கள் எல்லா மொழிகளிலும் இயக்கப்பட்டுள்ளன. ஆனால், அதுபோன்ற படங்களில் உள்ளே மாட்டிக் கொண்டவர்களின் மிக நெருக்கடியான காட்சிகளைக் காட்டி நமக்குள்ளும் அச்சத்தைக் கடத்தும் பாணி இருக்கும். அடுத்து, பார்வையாளர்களை அழத் தூண்டும் உணர்ச்சிக்கரமான காட்சிகளும் இடம்பெற்றிருக்கும். ஆனால், 'மஞ்னும்மல் பாய்ஸ்' படத்தில் மேற்சொன்ன உணர்ச்சிக்கரமான காட்சிகள் மேலோட்டமாகவே கையாளப்பட்டுள்ளன.

சுபாஷ் விழுந்த குழியை ஊர் மக்கள் 'சாத்தானின் சமையலறை' என்று நம்புகிறார்கள். அதற்குள் விழுந்தால் மீள முடியாது என உறுதியாகக் கூறுகிறார்கள். ஆனால், அக்குழிக்குள் சுபாஷ் விழும் காட்சியைச் சிறிது நேரம் காட்டினாலும் அதன் பயங்கரத்தை ஒரு மின்னல் வெட்டில் அவன் விழும் கணங்களைக் காட்டி முடித்துவிடுகிறார்கள். பார்வையாளர்களைப் பயமுறுத்த அக்காட்சியை இன்னும் கோரமாகக் காட்டியிருக்கக்கூடிய வாய்ப்புகள் இருந்தும் இயக்குனர் சிதம்பரம் அதனைத்



தவிர்த்துள்ளார்.

குழியில் விழுந்த நண்பனுக்கும் மற்றவர்களுக்கும் சிறுவயதிலிருந்தே இருக்கக்கூடிய நட்பையும் இதே போன்ற ஒரு சூழல் முன்பு சிறுவர்களாக இருக்கும்போது ஆற்றில் குளிக்கையில் ஏற்பட்டதையும் இணைக்கும் இடங்கள் கதையினூடே கச்சிதமாக முன்வைக்கப்பட்டுள்ளன.

குழிக்குள் விழுந்து குற்றியிராகக் கிடக்கும் சுபாஷின் சிதைந்த மனநிலையிலிருந்து எழும் மாய யதார்த்தக் காட்சிகள் போல் இயக்குநர் உருவகித்திருப்பார். ஆனால், எங்கேயும் பூதாகரமான அச்சுறுத்தல்மிக்க அதீத காட்சிகள் இல்லாமல் கதை நகர்ந்து செல்கிறது. அதேநேரம், படம் முடியும்போது கதைக்கான கணத்தை மனத்திற்குள் இறக்கியும் விடுகிறது.

ஏறக்குறைய படத்தின் மொத்தக் காட்சிகளுள் இருபது நிமிடங்கள் மட்டும்தான் சுபாஷ் குழியில் விழுந்ததும் உருவாகும் பரபரப்பு நீள்கிறது. பின்னர், படத்தில் வரும் காவல்துறையின் மெத்தனப்போக்கு அப்பரபரப்பைக் குறைத்துச் சில இடங்களில் நகைச்சுவையாக மாற்றுகிறது. இயக்குநர் இக்கதையை ஒரு மணி நேரத்திற்கு பரபரப்பின் உச்சத்தில் வைத்து நகர்த்தியிருக்கலாம். ஆனால், சில சமயங்களில் யதார்த்தம் அப்படியாக இருப்பதில்லை என்பதையே இப்படத்தினூடே காட்ட முனைந்துள்ளார். மனித மனம் எல்லா கணங்களிலும் அந்த உச்சத்தில் நின்றிருக்காது. இறப்பில்கூட நெருங்கிய உறவுகள் சிறிது நேரத்திற்குத் துயரிலிருந்து மீண்டும் இயல்புக்கு வந்து செல்வதைப் பார்க்க முடியும். இப்படத்தில் எனக்குப் பிடித்த இடங்களும் இவைதான்.

இப்படத்தில் வரும் காவல்துறையினர் மிகவும் யதார்த்தமாகப் படைக்கப்பட்டிருக்கிறார்கள். குணா குகையில் இருக்கும் அந்தச் சாத்தானின் சமையலறை என்கிற பெரும் ஆபத்தான குழியில் விழுந்தால் யாருமே உயிர் பிழைக்க முடியாது என்று வன்மையாகச் சொல்லி மீதி உள்ள நண்பர்கள் கூட்டத்தைக் கேரளாவிற்கே அனுப்ப நினைக்கிறார்கள். தம் நண்பனை விட்டு வர முடியாது என அத்தனை பேரும் அங்கேயே இருந்து அடம் பிடிக்கிறார்கள். அவர்களைச் சமாளிக்க முடியாமல் காவல்படை தடுமாறுகிறது.

படத்தின் இறுதி காட்சியில் மஞ்ஞும்மல் பாய்ஸ் குழுவிலிருந்த மூத்த நண்பன் குட்டனைக் குழிக்குள் இறக்கிதான் சுபாஷ் மீட்கப்படுகிறான். அதுவரை விழுந்தவனைக் காப்பாற்றவே முடியாது என்று காவல்துறை நம்புவதை மஞ்ஞும்மல் பாய்ஸ் இறுதியில் மாற்றிவிடுகிறார்கள். ஆனால், அப்பொழுதும் காவல்துறை இனி அவர்களைச் சுற்றுலா என்று சொல்லி இந்தப் பக்கம் வந்துவிடாமென மிரட்டுவதுதான் நகைச்சுவையும் யதார்த்தமும் கலந்த



காட்சியாக இடம்பெற்றிருக்கும். காவல்துறையின் நிலைபாடுதான் இதுபோன்ற இயற்கைக்கு ஊறுவிளைவிக்கும் இளைஞர்களுக்கான தண்டனை என நினைக்க வைத்த இடத்தையும் இயக்குநர் இலாவகமாக கதைக்குள் வைத்துள்ளார்.

இதுபோன்று விபத்திலிருந்து மீட்கும் பாணியிலான வேறு சில படங்களில் கடைசி காட்சியில் ஒட்டுமொத்த சமூகமே மனம் மாறிவிட்டதைப் போல் காட்டி அதன் உச்சத்தில் முடித்திருப்பார்கள். இப்படத்தில் சுபாஷ் காப்பாற்றப்பட்ட பின்னர் நண்பர்கள் அனைவரும் அவரவர் அன்றாட வேலைகளுக்குக் குற்றவுணர்ச்சியுடன் சென்றுவிடுகிறார்கள். கதையின் கடைசி சில காட்சிகள் குணா குகைக்குள் அத்துமீறி நுழைந்து சேதம் விளைவித்திருக்கக்கூடாது என்கிற மீட்புணர்வுடன் இவர்கள் சுழல்வதாகக் காட்டியிருப்பார். அழுத்தமில்லாத வெளிப்படையான காட்சிகளாக இல்லாவிட்டாலும் நம்மால் அதனைப் புரிந்துகொள்ள முடியும். இன்னொரு பகுதியில் சுபாஷ் மீண்டுவரப் போராடிக் கொண்டிருக்கிறான்.

சுபாஷின் அம்மா, குட்டன்தான் தம் மகனை அழைத்துச் சென்று நீர்வீழ்ச்சியில் விழக் காரணமாகிவிட்டான் என்று அவனை வெறுக்கிறார். பொது இடங்களில் அவனைப் பார்க்கும்போது முறைத்துவிட்டுச்செல்கிறார். ஆனால்,தேவாலயத்தில் குருவானவர் சொல்லும் உண்மை அவரைப் புரட்டிப் போடுகிறது. யாருமே காப்பாற்றத் துணியாத சாத்தானின் சமையலறையிலிருந்து சுபாஷை குட்டன்தான் தன் உயிரைப் பணையம் வைத்துக் காப்பாற்றுகிறான் என்று சுபாஷின் அம்மா அறிகிறார். அதுவரை குட்டனைத் தவறாக நினைத்துவிட்டோம் என்று சுபாஷ் அம்மா அவன் வீட்டை நோக்கி



ஓடுகிறார். ஊர் மக்களுக்கும் உண்மை தெரிந்து குட்டனின் வீட்டைச் சுற்றி சூழ்ந்துவிடுகிறார்கள். குட்டனின் அப்பாவிற்குக் குட்டன் ஏதோ தவறு செய்துவிட்டதால்தான் கூட்டம் கூடிவிட்டதெனப் பதற்றப்படுகிறார்.

சுபாஷின் அம்மா குட்டனின் கைகளைப் பிடித்துக்கொண்டு அழுகிறார். தம் மகனைக் காப்பாற்றிய அந்தக் கைகள், கடவுளின் கைகளுக்கு நிகராகமாறுகின்றன. இயக்குநர் சிதம்பரம் 'மஞ்ஞும்மல் பாய்ஸ்' படத்தின் வாயிலாகக் காட்ட முனைந்த முக்கியமான இடம் இதுதான் என்று தோன்றுகிறது. அந்தச் சாத்தானின் குழியையோ அல்லது சுபாஷ் அதில் விழுந்ததைக் கொண்டு பரபரப்பை உருவாக்கும் முயற்சியோ இயக்குநர் காட்ட விரும்பும் திறப்பு அல்ல. அதைத் தாண்டிய பின்னர் மனித மனம் அடையும் சலனமும் நிறைவுதான் 'மஞ்ஞும்மல் பாய்ஸ்'-ன் உச்சம்.

சுபாஷை, குட்டன் வெளியே கொண்டு வரும் தருணத்தில் 'குணா' படத்தில் ஒலித்த 'கண்மணி அன்போடு காதலன்' பாடல் ஒலிப்பரப்பாகிறது. தமிழ்நாட்டில் இப்படம் பெருமளவில் கவனம் பெறுவதற்கு இப்பாடலும் ஒரு காரணம்.

படத்தில் சில இடங்களில் சிக்கல்களும் இருக்கவே செய்தன. அத்தனை ஆழமிக்கக் குழியில் விழும் சுபாஷின் எலும்புகள் நிச்சயம் முறிந்து அவன் படுமோசமாக விபத்துக்குள்ளாகியிருக்கக்கூடும். ஆனால், மீட்கப்பட்ட அடுத்த சில மணி நேரங்களிலே அவன் மிகவும் இயல்பாகக் காட்டப்பட்டிருப்பான். அந்த இடத்தில் கையாளப்பட்டிருக்கும் ஒப்பனை படத்தின் நீட்சிக்கு ஒத்துழைக்கவில்லை. பின்னணி இசையில் இன்னுமும் கூடுதல் கவனம் செலுத்தியிருக்கலாம் என்று தோன்றியது.

குணா குகையில் மழை பெய்யும் காட்சி மிகவும் அழுத்தமாகவும் துல்லியமாகவும் படமாக்கப்பட்டிருந்தது. மழை நீர் வடிந்து சுபாஷ் இருக்கும் குழிக்குள் இறங்கியோடத் தொடங்கியதும் அவனுடைய நண்பர்கள் பரபரப்பாகிவிடுகிறார்கள். உடனே நீரோட்டத்தின் மீது படுத்தும் கட்டைகளைக் குறுக்காகப் போட்டும் மழை நீர் குழிக்குள் இறங்காமல் இருக்க அனைவரும் இணைந்து அணைக்கட்டுகிறார்கள்.

மனித மனங்களின் உணர்ச்சிக்கரமான தருணங்களும் யதார்த்தமான தருணங்களும் ஒன்றிணைந்து எழுப்பும் அலைகள்தான், 2006இல் உண்மையில் நடந்த சம்பவத்தைப் பின்னணியாகக் கொண்டு குறைந்த செலவில் இயக்கப்பட்ட இப்படம்.

படத்தின் முதல் பாதியில் குடித்தாடும் இளைஞர்கள் கூட்டம் படத்தின் இரண்டாம் பாதியில் தமக்குள் இருக்கும் ஈரத்தை விடாமல் பிடித்துக் கொண்டு எழும் நண்பர்களாக மாறுவதும் இப்பேற்பட்ட சட்ட விரோத மீறல்களைச் செய்த இக்கூட்டத்தைத் தமிழகக் காவல்துறை மன்னிக்காமல் எச்சரித்துவிட்டு அனுப்புவதையும் இயக்குநர் கையாள முயன்றிருக்கும் சமன்நிலையாகக் கருதுகிறேன்.

'மஞ்ஞுசுமல் பாய்ஸ்' மனித மனத்தின் பள்ளங்களுக்குள் விழுந்து கிடக்கும் உன்னதங்களை மீண்டும் மீட்டுக்கொள்ள நினைத்திருக்கும் படைப்பு.

கே. பாலமுருகன் <bkbala82@gmail.com>

# பெண்எழுத்து - பெருவெளி

## புதியமாதவி

பெண்ணிய வாசிப்புகள்: எழுதப்படும் பெண்களும் எழுதும் பெண்களும் (கட்டுரை நூல்) - அ. ராமசாமி; பக்: 246; விலை ரூ 300. வெளியீடு: ஜீரோ டிகிரி, முதல் மாடி, ஜேஎம்பி மோட்டார் சைக்கிள், 55(7) ஆர் பிளாக், 6ஆவது அவென்யூ, அண்ணாநகர் மேற்கு, சென்னை 600040; தொலைப்பேசி: +91 8925061999; மின்னஞ்சல்: zerodegreepublishing@gmail.com

பெண்களுக்கு எழுதுவதற்கு என்ன இருக்கிறது? கைப்பிடித்த கணவனின் பிரதாபங்களை எழுதுவதைத் தவிர. காலை முதல் இரவு வரை அவள் வாழும் சமையலறையின் சமையல் குறிப்புகளை எழுதலாம். குழந்தை வளர்ப்பு எழுதுவது தாய்மையின் வரப்பிரசாதம். நவீன நாகரீகப் பெண்மணியா... அப்படியானால் அவள் அழகுக் குறிப்புகளை எழுதலாம். ஓய்வான நேரம் வாய்த்தால் உங்கள் பூ பின்னல் கலைகளைப் பதிவிடலாம். உங்கள் கலை உள்ளத்தை வெளிப்படுத்த கோலம் வரையலாம். இப்படியாக பெண்கள் எழுதலாம்; இப்படியாகத்தான் பெண்கள் எழுத வேண்டும் என்பதே இன்றும் கூட 'பெண்கள் சிறப்பிதழ்கள்', 'மங்கையர் மாத இதழ்கள்'களின் அடிப்படை அம்சங்கள். இதைத்தாண்டி ஆண்டுக்கு ஒருமுறை வந்துபோகும் மகளிர் தினத்தில் (மார்ச் 08) பெண்களின் உரிமைகள் என்று முழங்கி தொண்டை வறண்டு மீண்டும் பழைய வாழ்க்கைக்குள் பத்திரமாக ஒதுங்கிவிடும் பெண்ணுலகம். .



பெண்கள் சுயசரிதைகள் எழுதினால் கூட அதில் எழுதுவதற்கு எதுவுமில்லை. அதை ஒரு ரிவென்யு ஸ்டாம்பின் பின்பக்கத்தில் எழுதிவிடலாம் என்றுதானே ஆணுல அறிவு ஜீவிகள் சொல்லி இருக்கிறார்கள். அம்ருதா ப்ரீதமின் சுயசரிதைக்கு 'ரிவென்யு ஸ்டாம்ப்' என்று குஷ்வந்த் சிங் 'நக்கலாக' சொன்னதையே தலைப்பாக்கியதை அவ்வளவு எளிதில் கடந்து செல்ல முடியுமா என்ன?

ஆனால்,,இம்மாதிரியான குறுகலான பாதைகளில் பயணித்தாலும் பெண்களின் பார்வைகள் ஒரு குறுகிய வட்டத்திற்குள் அடங்கிவிடவில்லை.

சன்னல் கம்பிகளின் ஊடாகத் தெரியும் வானத்தின் சிறியத் துண்டுகளும் பிரபஞ்சத்தின் ஒரு பகுதி என்பதை அறிந்தவள் பெண். அந்தச் சின்னச் சின்ன துண்டுகளை ஒன்றாக்கி விரித்து பார்க்கும்போது நாம் காணும் பெண்ணுலகம் அண்டவெளியை சிறியதாக்கிவிடுகிறது. 'எழுதப்படும் பெண்களும் எழுதும் பெண்களும்' பெண்ணிய வாசிப்பு கட்டுரைகள் - இந்த அசாதாரணமான பெண்வெளியை அவர்களின் எழுத்துகளின் வழியாக அடையாளம் காட்டி இருக்கிறது.



அ. ராமசாமி, பெண்களின் சிறுகதைகளை மட்டும் எடுத்துக்கொண்டு பெண்ணியப் பெருவெளியை ஒரு கோட்டோவியமாக வரைந்திருக்கிறார். இதில் பிரபலங்கள், புதியவர்கள் என்ற அளவுகோல்களை அவர் முற்றிலும் விலக்கி வைத்திருப்பது இக்கட்டுரை தொகுப்பின் தனித்துவம்.

பெண்கள் எழுதுவதால் அவை பெண்ணிய சிறுகதைகளா, தலித்துகள் எழுதுவதால் அவை தலித்தியமா என்ற விவாதங்களுக்கு பேராசிரியர் தன் தன் முன்னுரையில் ஒரு வகுப்பெடுத்துவிட்டுதான் நகர்ந்திருக்கிறார்.

“பொதுச்சொல் உணர்த்த நினைப்பது எல்லா காலத்துக்கும் பொருந்தக்கூடிய பேருண்மையை. ஆனால், சிறப்பு சொற்கள் உணர்த்துவது அறிதலின் தொடக்கம். வேற்றுமையைக் கண்டறிவது மூலமே சிறப்புச் சொற்கள் உருவாகின்றன’ (பக். 20) என்று வகுப்பு எடுக்கிறார் பேராசிரியர்.

ஔவையை ஓர் அறிவாளியாக காட்டும் எழுத்துகள், ஔவை ஒரு பெண் என்பதையும் காட்டுகின்றன என்று சிறந்த எடுத்துக்காட்டுகளுடன் தன் பெண்வாசிப்பு தளத்தை நகர்த்தி இருக்கிறார். பேராசிரியரின் இந்த வகுப்பு நேரம் இக்கட்டுரைகளின் ஊடாக பயணிக்கும் புதிய வாசகர்களுக்கு தேவையானதாக இருக்கிறது. சில தெளிவுகளுடன் அடுத்தக் கட்டடத்திற்கு நகர்ந்துவிட முடிகிறது.

இக்கட்டுரைகள் 26 பெண் எழுத்தாளர்களின் சிறுகதை வடிவத்தை எடுத்துக் கொண்டு கதைகளை கோட்பாட்டு ரீதியாகவும் கதையின் உள்ளடக்கத்தில் பயணிக்கும் பெண் கதாப்பாத்திரங்களின் வழியாகவும் என்று இரண்டு வகையிலும் எழுதப்பட்டிருப்பது, இதுவரை எழுதப்பட்ட பெண் எழுத்துகளின் பக்கங்களிலிருந்து இக்கட்டுரைகளை தனித்துவப்படுத்தும் இன்னொரு முக்கியமான அம்சம். சமகால அரசியலுடன் கோட்பாடு ரீதியான புரிதலையும், ஒவ்வொரு எழுத்தாளர்களின் ஒரு தனி சிறுகதையை மட்டுமே எடுத்துக்கொண்டு கட்டுரைகள் எழுதப்பட்டிருக்கின்றன. அதிலும் எழுத்தாளர்களின் ஒட்டுமொத்த சிறுகதைகளை எடுத்துக்கொள்ளாமல், பேராசிரியர் ஒவ்வொரு எழுத்தாளரின் ஒரு சிறுகதையை மட்டும் எடுத்துக்கொண்டு அதைக் கோட்பாட்டு ரீதியாக அணுகி இருப்பதால் கட்டுரை

தெளிவான புரிதலை ஏற்படுத்துகிறது. அதே நேரத்தில், அவர் எடுத்துக்கொண்ட 26 பெண் எழுத்தாளர்களின் ஒட்டுமொத்த படைப்புகளுடன் கட்டுரையாளருக்கு இருக்கும் வாசிப்பு அனுபவத்தையும் இக்கட்டுரைகள் வெளிப்படுத்துகின்றன.

டாக்டர் திரிபுரசுந்தரி என்ற எழுத்தாளர் லட்சுமியின் 'ஏனிந்த வேகம்' சிறுகதையை எடுத்துக்கொண்ட கட்டுரையில் 'லட்சுமியின் வாழ்க்கையை அவர் புனைகதைகளுக்குள் தேடினால் வாசிப்பவர்களுக்கு கிடைப்பது ஏமாற்றமே. ஆனால், முடிவு எடுத்தல், தனித்து வாழ்தல், சார்பற்ற வாழ்க்கைக்கு பெண்கள் தயாராதல் போன்றவற்றை முன்மொழியும் கதைகளின் வழியாகத் தன்னைக் கதைகளுக்குள் கொண்டுவந்தவர் அவர்' (பக். 41).

இப்படியாக பல கட்டுரைகளில் அந்தக் குறிப்பிட்ட எழுத்தாளர் குறித்த ஒரு கோட்டோவியத்தை வாசகரின் முன் வைத்துச் செல்கிறார் பேராசிரியர். இதில் அவருக்கு இருக்கும் தெளிவு அவரின் ஆழ்ந்த வாசிப்பு பின்புலத்திலிருந்து வெளிவந்திருக்கிறது. ஏற்கனவே கட்டமைக்கப்பட்டிருக்கும் ஒளிவட்டங்களிலிருந்து விலகி அவரவர் எழுத்துகளின் தனித்துவத்தைக் கண்டடையும் முயற்சியாக வெளிப்பட்டிருக்கிறது. இனி எதிர்காலத்தில், இலக்கிய உலகமும் பெண்ணியத் தளமும், இக்கட்டுரைகளின் இந்த கோட்டோவியங்களை அக்குறிப்பிட்ட எழுத்தாளரின் படைப்புலக அடையாளமாக அடிக்கோடிட்டு காட்ட முடியும்.

சிறுகதை வடிவம் என்பது ஓர் உணர்வு நிலை, அதன் வெளிப்பாடு என்ற கட்டுமான நெருக்கடி கொண்டதுதான். எனினும் ஒரு தேர்ந்த படைப்பாளர் இந்த நெருக்கடிகளைத் தாண்டி, கதை மாந்தரின் இரண்டு மூன்று நிலைகளையும் உணர்வுகளையும் ஒரே கதைக்குள் கொண்டுவர முடியும். எழுத்தாளர் திலகவதியின் 'போன்சாய் பெண்கள்' சிறுகதை இந்த நெருக்கடியை அனாயசமாக கடந்து வந்திருக்கிறது என்பதை பதிவு செய்திருப்பதன் மூலம் பெண் எழுத்துகள் சிறுகதை வடிவத்தில் எம்மாதிரியான சோதனை முயற்சிகளையும் செய்திருக்கின்றன என்பதை முன்வைக்கிறது 'ஒடுக்குதலின் அழகியலும் விடுதலையும்' (பக். 74) என்ற கட்டுரை.

பெண்ணிய வெளியில் இக்கட்டுரைகள் முன்வைக்கும் கலை வடிவமும் அரசியல் வடிவமும் முக்கியமானவை. ஒவ்வொரு கட்டுரையின் முன்பாதி விளக்கங்கள் கோட்பாட்டு ரீதியாகவும் சமகால அரசியல் ரீதியாகவும் பெண்ணியத்தை அணுகி இருக்கின்றன.

'நிகழ்காலத்தில் பெண்ணியம் எனும் கலைச்சொல் முழுமையான அரசியல் கலைச்சொல்லாக மாறிவிட்டது. இப்படியொரு கலைச்சொல்லை உருவாக்கித் தங்களின் விடுதலை அரசியலைப் பேசுவதற்குப் பெண்ணிய இயக்கங்கள் கடந்து வந்த நடைமுறை தடைகளும் கருத்தியல் முரண்பாடுகளும் பற்பல. உடலியல், உளவியல், சமூகவியல் கூறுகள் ஒவ்வொன்றிலும் முன்வைக்கப்பட்ட விவாதங்களை வென்றே பெண்கள் கடந்து வந்துள்ளார்கள்' (பக். 31) என்று பெண்ணியம் என்ற அரசியல் கலைச்சொல்லின் இயக்க வரலாற்றை எழுதிச் செல்கிறார்.

காதலையும் காமத்தையும் பசலையாகவும் புலம்பலாகவும் கட்டமைத்த ஆண் எழுத்துகளிலிருந்து பெண் எழுத்துகள் முற்றிலும் வேறானவை. பெண்ணுடல் என்பது காமத்தின் கொள்கலன் மட்டுமல்ல. அது அவளுக்கான உடலரசியலாக இருந்ததையும் தாண்டி அவள் வாழும் நிலத்தின் சமகால அரசியலில் என்னமாதிரியான வினை புரிகிறது என்பதை ஈழவாணியின் 'வெண்ணிறத்துணி' சிறுகதையை எடுத்துக் கொண்டு எழுதியிருப்பது சிறப்பு.

ஈழவாணியின் இக்குறிப்பிட்ட சிறுகதை பெண்ணுடல் மீது திணிக்கப்பட்டிருக்கும் பண்பாட்டு அரசியலை எடுத்துக்கொண்டு அதை அப்பெண்ணுடல் எம்மாதிரியான சமகால அரசியல் ஆயுதமாக கையாண்டிருக்கிறது என்பதை வெளிப்படுத்தும் முக்கியமான தளம். இக்கதையைத் தெரிவு செய்திருப்பதன் மூலம் பெண்ணுடல் பெண்கதைகள் என்பதை தமிழ்ப்பெண்ணுடல், தமிழ்ப் பெண்களின் பண்பாடு கலாச்சாரம் இத்தியாதிகளை எளிதில் கடந்து பயணிக்கும் எழுத்தாக்கி, சமகால அரசியலில் பெண்வெளியின் மிக முக்கியமான புள்ளிகளை அடையாளம் காட்டுகிறது இக்கட்டுரை.

இக்கட்டுரையின் அரசியல் களம், இலங்கை. கதையை எழுதியவர் ஈழவாணி. கதையில் எழுதப்பட்ட பெண் சிங்களப் பெண். அவளும் அவள் முன்வைக்கும் அரசியலும் மொழி இன எல்லைகளைக் கடந்த பெண்ணுடலின் அரசியல்.

நிர்மலி அவள் ஆர்மிக்காரனின் மனுஷி. ஆர்மிக்காரனின் மனுஷி என்பதால் இளசுகள் முதல் முதியவர்கள் வரை தள்ளி நின்றாலும் திமிரிக்கொண்டு திரியும் அந்த அரபுக் குதிரையை ரசிக்க அந்தக் கண்கள் தவறியதில்லை. சிங்களவர் கலாச்சாரப்படி திருமணம் முடிந்தப்பின் முதலிரவில் விரிக்கப்படும் வெள்ளைத் துணியில் ரத்தக்கசிவு இருக்க வேண்டும். அது அப்பெண்ணின் கன்னிமைத் தன்மையை உறுதிப்படுத்தும். இல்லை என்றால் அவள் திருமணத்திற்கு முன் உடலின் காமத்தை அனுபவித்தவளாகி, கற்பிழந்தவளாக கருதப்பட்டு, விலக்கி வைக்கப்படுவாள். இக்கதையில் நிர்மலியின் வெள்ளைத் துணியில் ரத்தக்கசிவு இல்லை. ஆனாலும் அவள் கணவன் கொடித்துவக்கு அவளை விலக்கி வைக்கவில்லை. கொடித்துவக்கு என்ற ஆணுடலின் அரசியல் என்னவாக இருக்கிறது; அதை நிர்மலி என்ற காமம் கொப்பளிக்கும் பெண், தன் பெண்ணுடலை




அரசியலாக்கி எவ்வாறு எதிர்கொண்டாள் என்பதே அப்பெண்ணுடலில் கதை. இக்கதையின் அதிர்வலைகள் பெண்ணுடல் எழுதிய போர் அதிகாரம்.

'அவன் அடங்காத காமத்தோடு அவளைத் தீண்டி உச்சமடையும் தருணங்களில் எல்லாம் கற்பழித்து சீரழிக்கப்பட்ட இசைப்பிரியாவை பற்றி கேட்கத் தொடங்கினாள். இன்னும் சில கூட்டு புணர்ச்சியால்சீரழிக்கப்பட்ட,வன் காமப்புணர்வால் சாகடிக்கப்பட்ட பெண்களிற்கும் காரணமாக இருந்தவர்களில் நீயும் ஒருத்தன்தான் எனவும்,எப்படி.. எந்த முறையில் இப்படியா.. இப்போது நீ என்னைப் புணர்வது போன்றா.. என்ற கேள்விகளை ஒவ்வொரு தொடுகையின் போது சத்தமிட்டு ஆவேசமாக கேட்கத் தொடங்கினாள்...' (பக். 231)

தேச மொழி இன அரசியலை பெண்ணுடல் வழியாக எழுதிய அதிகாரம் எப்போதும் பெண்ணுடலுக்கு எதிராகவே செயல்படுகிறது என்ற நுண்ணரசியலையும் பெண்கள் எழுதுகிறார்கள் என்பதற்கு ஈழவாணியின் இக்கதை ஆகச்சிறந்த எடுத்துக்காட்டு. 'ஒரு பெண்ணாக எனக்கு தேசமில்லை, ஒரு பெண்ணாக நான் தேசத்தை விரும்பவும் இல்லை. ஒரு பெண்ணாக என் தேசமே என் உலகம்' என்ற வர்ஜீனியா வுல்ஃப் வரிகள் தான் நினைவுக்கு வருகின்றன.

தேசம் இனம் மொழி போர் வெற்றி இப்படியாக அதிகார மையத்தை நோக்கி நகரும் அனைத்தும் பெண்ணுடல் எதிர்கொள்ளும் சவாலாகவே இருக்கின்றன.

இந்தியாவிலிருந்து கு.ப. சேதுஅம்மாள், பாவை, லட்சுமி, ஆர். சூடாமணி, எம்.ஏ. சுசிலா, ஜோதிர்லதா கிரிஜா, திலகவதி, ச. விசயலட்சுமி, பாமா, காவேரி, புதியமாதவி, அம்பை, உமாமகேஸ்வரி, கவிதா சொர்ணவல்லி, சந்திரா, தீபு ஹரி, இலங்கையிலிருந்து தமிழ்க்கவி, லறீனா, கறுப்பி சுமதி, தமிழ் நதி, மஜீதா, ஈழவாணி, பிரமிளா பிரதீபன், சிங்கப்பூரிலிருந்து சுஜா செல்லப்பன், ஹேமா, அழகு நிலா ஆகியோரின் கதைகளை எடுத்துக்கொண்டு எழுதப்பட்டிருக்கும் கட்டுரைத்தொகுப்பு. சிறுகதை இலக்கிய வடிவத்திலும் உள்ளடக்கத்திலும் மாறிக்கொண்டே வந்திருக்கிறது என்பதையும் தெளிவாக முன்வைக்கிறது.

பெண்களின் உடலரசியல், உளவியல். குலம், குடும்பம்,தாலி,பிள்ளைப்பேறு,பெண்களின் இரட்டை மன நிலை, ஒன்றாகவே பிறந்து வளர்ந்தாலும் பெண்களின் விருப்பங்களும் வாழ்க்கை முடிவுகளும் வேறுபடுவதன் காரணங்கள், கணவன் நண்பன் என்ற சொல்லாடல்களின் ஊடாக சமூகத்தின் குறுக்குவெட்டுத் தோற்றத்தைக் காட்டும் பெண்கள், குடும்ப நிறுவனத்தின் கற்பிதங்களும் அதன் மீறல்களும் என்று பெண்ணின் அகமும் அவள் வாழும் சூழலின் அரசியலும் எழுதும் பெண்களின் எழுதப்படும் பெண்களை எவ்வாறெல்லாம் கதைகளாக்கி அக்கதைகளின் ஊடாக ஒரு பெருவெளியில் பயணித்திருக்கின்றன என்பதை இக்கட்டுரைகள் வெளிப்படுத்துகின்றன

பெண்ணிய சிந்தனைவெளியில் ஓர் அரை நூற்றாண்டு பெண்வெளியை தொகுத்திருக்கும் இக்கட்டுரைகள் தனித்துவமானவையாகவும் கோட்பாட்டு ரீதியாக கதைகளை அணுகும் ஆய்வாளர்களுக்கு ஓர் ஆவணமாக கவனத்துடன் தொகுக்கப்பட்டிருப்பது நம்பிக்கை அளிக்கிறது. விசாலமான வாசிப்புத் தளமும் கவனமாக தெரிவு செய்திருக்கும் கதைகளும் அதன் போக்குகளும் பெண்ணிய தளத்தில் கவனிப்புக்குரியவை.

26 பெண் எழுத்தாளர்களைப் பற்றிய சிறுகுறிப்பு பிற்சேர்க்கையாக சேர்க்கப்பட்டிருந்தால் ஆய்வு மாணவர்களுக்குபேருதவியாகஇருந்திருக்கும்.மேலும் எடுத்துக்கொண்ட கதைகள் எழுதப்பட்டு வெளிவந்த ஆண்டுகள் சில கதைகளில் மட்டுமே தெரியவருகிறது. அக்குறிப்பு இணைக்கப்பட்டிருந்தால் கதைகளில் எழுதப்பட்ட பெண்களையும் முழுமையாக அக்காலப் பின்னணியுடன் எதிர்கால வாசகர்கள் புரிந்துகொள்ள வசதியாக இருக்கும். இவை இம்மாதிரி கட்டுரை தொகுப்புகளின் ஆய்வு ரீதியான பார்வைக்கு வழிவகுக்கும்.

புதியமாதவி <mallikasankaran@gmail.com>

(5 ஆம் பக்கத் தொடர்ச்சி)

தற்போது சங்கீத வித்வத் சபை முடிவை எதிர்க்கும் இவர்கள் எவரையும்விட திறமையான கலைஞர் டி.எம். கிருஷ்ணா என்பதில் சந்தேகம் இல்லை. எதிர்க்கும் ரஞ்சனி காயத்ரி சகோதரிகளும் சரி, மற்ற கலைஞர்களும் சரி, யாரும் டி.எம். கிருஷ்ணாவின் சங்கீத திறமையை கேள்வி எழுப்பவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. சங்கீத உலகின் இன்றைய கலைஞர்களில் எவரையும்விட இந்த விருதுக்கு மிகப் பொருத்தமானவர் டி.எம். கிருஷ்ணா என்பதே அவரை எதிர்ப்பவர்கள் கருத்தாகவும் உள்ளது. அப்புறம் ஏன் எதிர்ப்பு?

இசை பாரம்பரியமுடைய ஒரு குடும்பத்தில் பிறந்தவர் என்றாலும்; சீதாராம ஷர்மா, செங்கல்பட்டு ரங்கநாதன், செம்மங்குடி ஸ்ரீநிவாஸ ஐயர் போன்ற மிகப் பெரிய கலைஞர்களிடம் பயின்றிருந்தாலும், சங்கீதத்தில் தனக்கென ஒரு பாணியை உருவாக்கிக் கொண்ட ஒப்பற்ற கலைஞர் டி.எம். கிருஷ்ணா. பாடுவதுடன் கர்நாடக இசை, அதன் வடிவம், அழகியல், பரிணாமம் குறித்து அறிவுப்பூர்வமாக பேச முடிந்த வெகு சிலரில் ஒருவர். தனது இசைப் புலமைக்காகவும் துணிச்சலான எழுத்துக்காகவும் சமூகச் செயல்பாடுகளுக்காகவும் பல சர்வதேச விருதுகள் பெற்றுள்ளவர்.

உலகளவில் பல இசை மரபுகள் உள்ளன. அதில் ஒவ்வொன்றிலும் பலதரப்பட்டவர்கள் பாடுகிறார்கள், வாசிக்கிறார்கள். ஹிந்துஸ்தானி, கருப்பின மக்கள் உருவாக்கிய ஜாஸ் உட்பட பல இசை மரபுகள் இப்படித்தான் செழுமையானது, நவீனமானது. ஆனால், இதற்கு மாறாக கர்நாடக இசை மரபு மட்டும் ஒரு இறுக்கமான கட்டமைப்பில் இயங்குகிறது; குறிப்பிட்ட இனத்தவர்கள் மற்றவர்களை உள்ளே புகவிடாமல் கதவுகளை அடைத்து வைத்துள்ளார்கள். கெட்டித் தட்டிப்போன இந்த வட்டத்தை டி.எம். கிருஷ்ணா உடைக்க முயல்கிறார். கர்நாடக இசை ஒரு பிரிவினர் மத்தியில் சிறைபட்டுள்ளதை மீட்டு ஜனநாயகப்படுத்த போராடுகிறார். தங்களை உயர் சாதி என கருதிக்கொள்பவர்களுக்கு மட்டுமானது கர்நாடக இசை என்பதை மறுத்து அனவருக்கும் பொதுவானது இசை என எடுத்து செல்கிறார்.

இதற்காக சூழியல் செயற்பாட்டாளர் நித்யானந்த் ஜெயராமனுடன் சேர்ந்து சென்னை ஊரூர் ஆல்காட் குப்பத்தில் சாஸ்த்ரீய இசை நிகழ்ச்சிகளை நடத்தியிருக்கிறார். இதுவரை ஐந்து முறை இந்த விழா நடைபெற்றிருக்கிறது. சமூக சீர்திருத்தவாதியான நாராயண குருவின் பாடல்கள் மற்றும் எழுத்தாளர் பெருமாள் முருகனின் பல பாடல்களுக்கு கர்நாடக இசையில் இசையமைத்துப் பாடியுள்ளார். வைக்கம் போராட்டத்தின் நூற்றாண்டை ஒட்டி, பெரியார் குறித்து பெருமாள் முருகன் எழுதிய 'சிந்திக்கச் சொன்னவர் பெரியார்' என்ற ஒரு பாடலையும் டி.எம். கிருஷ்ணா பாடியிருந்தார்.

இசையின் மீது கட்டமைக்கப்பட்ட சாதியச் சமூக அரசியல் பற்றி தனது 'செபாஸ்டியன் அண்டு சன்ஸ்' நூலில் விரிவாக அலசியிருக்கிறார், டி.எம். கிருஷ்ணா. கர்நாடக இசைக் கச்சேரிகளில் முதன்மையானதாக பயன்படுத்தப்படும் தாளக்கருவி மிருதங்கம். இந்த மிருதங்கத்தின் உருவாக்கம், வரலாறு, அதற்காகப் பதனிடப்படும் தோல், இதை உருவாக்கும் அடித்தட்டு மக்கள், இதன் பின்னால் இருக்கும் சாதி அரசியலை இந்நூலில் டி.எம். கிருஷ்ணா விவரிக்கிறார். மிருதங்கம் தயாரிப்பவர்கள் அதற்காக செலுத்தும் உழைப்பு, அவர்கள் எதிர்கொள்ளும் இடர்கள், அவர்களுக்கு வழங்கப்படும் சொற்ப ஊதியம் என்பதுடன் அவர்களுக்கு உரிய அங்கீகாரத்தை கர்நாடக இசை சமூகம் வழங்கவில்லை என்பதையும் அழுத்தமாக குறிப்பிட்டுள்ளார்.

மிருதங்கத்தின் உடல் கூடு பலா மரத்தினால் செய்யப்பட்டது. இரு புறமும் சரிந்து இறங்கும் அதன் முனைகளான வலமும் இடமும் பசு, எருமை மாடுகளின் தோல் மற்றும் ஆட்டுத் தோல் ஆகியவற்றால் இழுத்து மூடப்பட்டிருக்கின்றன. இறந்த ஆடு, மாடுகளின் தோலில் இருந்து அல்ல, இதற்காகவே ஆடு, மாடுகளை கொன்று, அவற்றின் தோலை உரித்து எடுத்தே, இது செய்யப்படுகிறது. பசுக்களை கொல்லக்கூடாது, மாட்டுக்கறி சாப்பிடக்கூடாது என்று வலியுறுத்துபவர்கள் தான் இதையும் செய்கிறார்கள் என்பதையும் அவர்களின் போலித்தனத்தையும் அம்பலப்படுத்துகிறார், டி.எம். கிருஷ்ணா.

இது எல்லாம்தான் இன்று டி.எம். கிருஷ்ணாவை எதிர்ப்பவர்களுக்கு பதற்றத்தை உருவாக்குகிறது. பதற்றத்தில் பொய்களையும் அவதூறுகளையும் அள்ளி வீசுகிறார்கள். "மிகவும் போற்றப்படும் தியாகராஜர், எம்.எஸ். சுப்புலட்சுமி போன்றவர்களை டி.எம். கிருஷ்ணா அவமதித்துள்ளார்" என்கிறார்கள் ரஞ் சனி காயத்ரி சகோதரிகள்.

எம்.எஸ். சுப்புலட்சுமி குறித்து டி.எம். கிருஷ்ணா எழுதிய நீண்ட கட்டுரையை தனி நூலாகவும் காலச்சுவடு பதிப்பகம் வெளியிட்டுள்ளது. ரஞ்சனி காயத்ரி கடிதத்தில் சொல்வதைப் பார்க்கும்போது, இந்நூலை இவர்கள் படித்திருப்பார்களா என்ற சந்தேகமே ஏற்படுகிறது. படித்துப் பார்த்திருந்தால் இந்நூலில் எம்.எஸ். சுப்புலட்சுமிக்கு டி.எம். கிருஷ்ணா, மாபெரும் புகழாரம் சூட்டுவதையும், எம்.எஸ். சுப்புலட்சுமியின் திறன் வீணடிக்கப்பட்டுள்ளதை சுட்டிக்காட்டி அவரது ஆளுமையையும் இசையையும் அணுகிய விதத்திற்காக இசையுலகினரைக் கூர்மையாக விமர்சிப்பதையும் அறிந்திருப்பார்கள். தன்னை எதிர்ப்பவர்கள் போலல்லாமல் இந்நூலில் வார்த்தைகளையும் பொருளையும் மிகச் சரியாகவே கையாண்டுள்ளார், டி.எம். கிருஷ்ணா. எம்.எஸ். சுப்புலட்சுமியை டி.எம். கிருஷ்ணா அவமதித்துவிட்டார் என்று இன்று கூறும் ரஞ்



சனி காயத்ரி சகோதரிகள், இதுவரை இந்நூலை மறுத்து பேசியதோ எழுதியதோ இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

தான் புலங்கும் சூழலில் நிகழும் அத்துமீறல்களுக்கு எதிராக குரல் கொடுப்பதே ஒரு கலைஞனின் தார்மீக கடமை. ஆனால், இதே சங்கீத உலகில் பாலியல் சுரண்டல் இருக்கிறது என்று பேசப்பட்டபோது இன்று கொதிப்பவர்கள் அனைவரும் அமைதி காத்தனர். கலாஷேக்த்ரா பாலியல் சுரண்டலுக்கு எதிராக டி.எம். கிருஷ்ணா மட்டுமே அறிக்கை வெளியிட்டிருந்தார். பாலியல் சுரண்டலை விட தங்கள் கருத்துக்கும் நம்பிக்கைக்கும் மாறான கருத்தை ஒருவர் பேசுவதும் செயல்படுவதும்தான் சிலரை பதற்றத்துக்கு உள்ளாக்குகிறது என்றால் அவர்கள் செயல்பாடுதான் சந்தேகப்பட வேண்டியது.

மார்ச் 17 ஆம் தேதி டி.எம். கிருஷ்ணாவுக்கு சங்கீத கலாநிதி விருது அறிவிக்கப்படுவதற்கு முன்னதாக இந்த ஆண்டு தியாகராஜ ஆராதனை நாளையொட்டி, நீண்ட இடைவெளிக்குப் பின், சங்கீத வித்வத் சபை மேடையில் டி.எம். கிருஷ்ணா கச்சேரி நடைபெற்றது. அப்போதே இந்த ஆண்டு சங்கீத கலாநிதி விருது டி.எம். கிருஷ்ணாவுக்கே அறிவிக்கப்படும் என தகவல்கள் வெளியானது. அப்போதெல்லாம் அமைதி காத்தவர்கள் தற்போது திடீரென ஒரு கூட்டமாக எதிர்ப்பை தெரிவித்துள்ளது, அவர்களை பின்னால் இருந்து சிலர் இயக்குகிறார்களோ என்ற சந்தேகத்தையும் ஏற்படுத்துகிறது. சங்கீத வித்வத் சபைக்கு எழுதிய கடிதத்தை ரஞ்சனி காயத்ரி சகோதரிகள் பொதுவெளியில் பகிர்ந்தது, அவர்கள் கடிதத்தின் நோக்கம் குறித்த சந்தேகத்தை எழுப்புகிறது என்று சங்கீத வித்வத் சபை தலைவர் முரளி எழுதியுள்ளது குறிப்பிடத்தக்கது.

பெரியாரை புகழ்ந்து டி.எம். கிருஷ்ணா பாடுவதையும் பேசுவதையும் எதிர்க்கும் ரஞ்சனி காயத்ரி சகோதரிகள், இந்திய பிரதமர் மோடியை புகழ்ந்து பாடியுள்ளதும் குறிப்பிடத்தக்கது. மேலும், தங்கள் கடிதத்தில் பெரியார் மீது அவர்கள் வைக்கும் குற்றச்சாட்டுகள் பொய்யானவை என்று பலமுறை நிரூபிக்கப்பட்ட பின்பும்கூட ஒரு தரப்பினர் மீண்டும் மீண்டும் அதே பொய்களை முன்வைத்து அவதூறு செய்து வருவதும் குறிப்பிடத்தக்கது.

நமது அரசமைப்பு சட்டம் ஒவ்வொரு குடிமகனுக்கும் வழங்கியுள்ள தனி மனித கருத்து சுதந்திரத்தை இன்று டி.எம். கிருஷ்ணாவுக்கு வழங்க மறுப்பவர்கள், இந்த எதிர்ப்பின் மூலம் கர்நாடக இசைச் சூழல் குறித்து டி.எம். கிருஷ்ணா முன்வைத்து வரும் விமர்சங்கள் சரிதான் என்பதையும், கர்நாடக இசை உலகம் இசையை மட்டுமே முன்னிறுத்தி உருவான ஒன்றல்ல, மதப்பற்றும் சாதிப்பற்றுமே அதன் அடித்தளம் என்பதையும் உறுதிபடுத்தி இருகிறார்கள். கலையைவிட தங்கள் நலன்களே முக்கியம் என்பதை வெளிப்படுத்தி இருக்கிறார்கள்.

தங்கள் சமூக நலனை முன்னிட்டு, அரசியல் களங்களில் ஒரு தரப்பினர் உருவாக்கி வரும் வெறுப்பு, சகிப்பின்மை தற்போது கலைத்துறையிலும் பரவி இருக்கிறது. இது கவலை தரக்கூடியது.

# நம்பிக்கயை விதைக்கும் உலக சமூக மாமன்றம்

## அ. இருதயராஜ்

மலைகளும்சிகரங்களும் சூழ்ந்துள்ள நேபாளத்தில், பள்ளத்தாக்கு நகரம் என்று அழைக்கப்படுகின்ற காட்மண்டில், உலக சமூக மாமன்றம் பிப்ரவரி மாதம் (15-19) நடந்து முடிந்துள்ளது. இதில் பங்கேற்ற அனுபவம் பெரும் மகிழ்ச்சியையும் நம்பிக்கையும் தந்தது.

'இன்னொரு உலகம் சாத்தியம்', 'மாற்று உலகம் சாத்தியமே' என்கின்ற கோஷங்களோடு ஆரம்பித்த இந்த உலக சமூக மாமன்றம் ஏறக்குறைய 60 தீர்மானங்களை முன்னிறுத்தியுள்ளது. தொடக்க நாளில் நடந்த பேரணியில் கூலித் தொழிலாளர்கள், விவசாயிகள், தலித்துகள், பழங்குடியினர், மாற்றுத் திறனாளிகள், தொழிற்சங்க உறுப்பினர்கள், பேராசிரியர்கள், பெண்கள், பாலின சிறுபான்மையினர்,வெவ்வேறு இன குழுக்கள்,சிவில் உரிமை குழுக்கள், மனித உரிமை போராளிகள், இதழியளாலர்கள்,களப்பணியாளர்கள் என பல்வேறு பிரிவினர் சரி சமமாக கலந்துகொண்டனர்.

ஆதிக்க கருத்துகளுக்கு எதிராகவும் அடிமைத்தனத்தை வேரறுகின்ற வகையிலும் விடுதலை காற்றை சுவாசிக்க வேண்டும் என்ற வேட்கையோடும் மனிதர்கள் ஒன்று கூடி வருகின்ற தளம் தான் உலக சமூக மாமன்றம். உலகமயமாக்கள், எதேச்ச அதிகாரங்களுக்கு எதிராக உருவாக்கப்பட்ட இந்த உலக சமூகம் மாமன்றம், 2001ஆம் ஆண்டு முதன் முதலில் பிரேசிலில் ஆரம்பிக்கப்பட்டது. அதன் பிறகு 15 முறை இந்த உலக சமூக மாமன்றம் பல்வேறு நாடுகளில் நடந்திருக்கின்றது. ஆசிய நாடுகளில் 2004ஆம் ஆண்டு மும்பையில் நடைபெற்றது; இப்பொழுது, 16ஆவது நேபாளத்தில் நடைபெற்றிருக்கின்றது.



நேபாளத்தில் உலக சமூக மாமன்றம் நடக்கும் என்பது 2022ஆம் ஆண்டே தீர்மானிக்கப்பட்டது. அதன் பிறகு,நேபாள அரசு அதற்கான பல்வேறு தயாரிப்புகளை ஆரம்பித்தது. உள்கட்டுமான வசதிகள், பங்கேற்பாளர்களுக்கு தங்கும் வசதி, கருத்துரை வழங்குகின்ற அரங்கங்கள், கண்காட்சித் திடல், கலையரங்கம் ஆகியவற்றை ஏற்பாடு செய்தது. இந்த உலக சமூக மான்றத்தில் ஏறக்குறைய 98 நாடுகளிலிருந்து வந்த ஐம்பதாயிரம் பங்கேற்பாளர்கள் கலந்துகொண்டனர். உலகமெங்கும் செயல்படுகின்ற 1400 அமைப்புகள் இதில் பிரதிநிதிதுவம் பெற்றன. எல்லோரையும் ஆச்சரியப்பட வைக்கின்ற வகையில் 30-க்கும் மேற்பட்ட நாடுகளிலிருந்து வந்த சர்வதேச இளைஞரணி குழுக்கள் கலந்துகொண்டன.

இந்த சமூக மாமன்றத்தில் ஏறக்குறைய 400 வகையான செயல்பாடுகள் இருந்தன. பதிமூன்று வகையான மையத் தலைப்புகளில் கருத்தரங்கள், கலந்துரையாடல்கள், விவாதங்கள் நடைபெற்றன. பொருளாதாரம், புலம்பெயர் தொழிலாளர்கள் பிரச்சனை, ஜாதி வேற்றுமை, பாலின அசமத்துவம், பண்பாட்டு தளத்தில் நடக்கின்ற போராட்டம், சுற்றுச்சூழல் பாதுகாப்பு, இனக்குழுக்களின் பிரச்சனைகள், மனித உரிமை பிரச்சனைகள், சமூக இயக்கங்கள் என்கின்ற வகையிலே பல்வேறு தலைப்புகளில் உரையாடல்கள் நடந்தன.

அரங்குகளைப் பார்க்கின்ற பொழுது வேற்றுமையில் ஒற்றுமையை காண முடிந்தது. பன்மைதுவத்தைக் கொண்டாடுகின்ற பண்பை பார்க்க முடிந்தது. நாட்டை ஆளும் அரசுக்கும் மதத்திற்கும் சம்மந்தம் இருக்க கூடாது என்ற கோஷம் விண்ணை முட்டியது.

பல்வேறு நாடுகளிலிருந்து பங்கேற்பாளர்கள் கலந்துகொண்டதால், சாதி மதம், இனம், மொழி, வட்டாரம், அந்தஸ்து, பாலினம், அனைத்தையும் கடந்து எல்லோரும் ஒரே குரலாய், ஒரே சிந்தனையும் ஒரே குறிக்கோளும் கொண்டவர்களாய், ஒன்று கூடி கோஷமிட்டதையும் கருத்துக்களை பரிமாறிக் கொண்டதையும் பார்க்க முடிந்தது.

இந்த அனுபவம் எனக்கு ஏதோ ஒரு புதிய உலகத்திற்குள் சென்று வந்த




உணர்வை தந்தது. யாரும் யாருக்கும் அங்கு அந்நியர்கள் அல்லர். வேற்றுமைகளைக் கடந்து எல்லோருமே நண்பர்கள் போலவும் உறவினர்கள் போலவும் உரையாடியது புத்துணர்வைக் கொடுத்தது.

எந்த அரங்கத்திலும், மொழி தெரியாவிட்டாலும் கலந்துகொள்ளலாம் அங்கேயுள்ள மொழிபெயர்ப்பு நமக்கு உதவுகின்றது.மைதானத்தில் நடைபெற்ற மனிதச் சங்கிலி போராட்டத்தில் யார் வேண்டுமானாலும் கலந்துகொள்ளலாம். பண்பாட்டு கலை அம்சங்கள் கொண்ட நடனங்கள் அரங்கேறின. யாரும் எப்போதும் அங்கு சென்று நடனம் ஆடலாம். இவை அனைத்தையும் ஒரு மையப்புள்ளியில் இணைப்பது மனித மாண்பும் மனித நேயமும் தான்.

இந்த உலக சமூக மான்றத்தில் பல்வேறு நாடுகளில் நடந்து கொண்டிருக்கின்ற போர்களைப் பற்றி அதிகம் விவாதிக்கப் பட்டது. உள்நாட்டிற்குள்ளேயே பாதிக்கப்பட்டு உடைமைகளையும் உறவினர்களையும் இழந்தவர்கள் நிராயுதபாணியாக கைவிடப்பட்டுள்ளனர். எடுத்துக்காட்டாக, உக்ரேன் - ரஷ்யா, இஸ்ரேல் - பாலஸ்தீனம், இந்தியாவில் மணிப்பூர் மாநிலத்தில் வன்முறையால் பாதிக்கப்பட்டு இன்றைக்கும் தற்காலிக கூடாரங்களில் தங்கி இருக்கின்றார்கள். அவர்களுக்கு நிம்மதியான வாழ்வு வேண்டும்; நிரந்தரமான குடியிருப்புகள் வேண்டும்; இயல்பு வாழ்க்கைக்கு அவர்கள் மீண்டும் திரும்ப வேண்டும். மனித உரிமை அடிப்படையில் அவர்களுக்கு வேண்டிய அனைத்தும் கிடைக்கப் பெற வேண்டும் என்கின்ற குரல் அங்கே ஓங்கி ஒலித்தது. இந்த உலகம் அமைதியான உலகமாக இருக்க வேண்டும். யுத்தங்களும் போர்களும் இல்லாத பூமியாக இருக்க வேண்டும் என்கின்ற ஆசையும் ஆவலும் கருத்தரங்க கூடாரத்திற்குள் உலா வந்ததை பார்க்க முடிந்தது.

இந்தியாவிலிருந்து இலங்கைக்கு தேயிலைத் தோட்ட தொழிலாளராக சென்ற தலித் மக்கள் 200 வருடங்களை கடந்து நிற்கின்றார்கள். ஆனால், இன்னும் அந்த தேயிலைத் தோட்ட தொழிலாளர்கள் வாழ்வு மேம்பட்டதாக இல்லை. ஒரு புதிய அடிமைத்தனத்திற்குள்ளேயே இன்னும் விழுந்து கிடக்கின்றார்கள். தேயிலைத் தோட்டத்திலிருந்து இந்தியாவிற்கு திரும்பியர்களின் வாழ்க்கையும் பிரகாசமாக இல்லை. இதை பிரதிபலிக்கின்ற வகையிலே ஒரு கருத்தரங்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதிலே தேயிலைத் தோட்ட தொழிலாளர்கள் எப்படி நவீன அடிமைத்துவத்துவத்தை இன்னும் சுவைத்துக் கொண்டிருக்கிறார்கள்; தாயகம் திரும்பியவர்களுக்கு எத்தகைய சவால்கள் இருக்கின்றன. அவர்கள் நிலமற்றவர்களாய், வீடற்றவர்களாய், ஒரு நிரந்தர அடையாளம் இல்லாதவர்களாய் வாழ்கின்ற பிரச்சனை இந்த சமூக மாமா மன்றத்தில் பேசப்பட்டது. இதன் மூலம் இலங்கை தேயிலைத் தோட்டத் தொழிலாளுடைய பிரச்சனையும் அவருடைய உரிமையும் உலக அரங்கிலே ஓங்கி ஒலிக்க வேண்டும் என்கின்ற கனவு நிறைவேறி இருக்கின்றது.

ஒவ்வொரு ஆண்டும் சுற்றுச்சூழல் இன்னும் கூடுதலாக பாதிக்கப்படுகின்றது. தட்பவெப்ப நிலை மோசம் அடைந்து வருகின்றது என்பதை நாம் எல்லோரும் அறிவோம். அதனால் இந்த உலக சமூக மாமன்றத்தில் எண்ணற்ற அரங்குகளில் சுற்றுச்சூழல் பாதுகாப்பு குறித்தும் சுற்றுச்சூழல் பாதிக்கப்படுவதால் ஏற்படுகின்ற தீமைகள் குறித்தும் நாம் எதிர்கொள்ள வேண்டிய சவால்கள் குறித்தும் அதிகமாக விவாதிக்கப்பட்டன. சுற்றுச்சூழல் குறித்த விவாதங்களை எல்லாம் பார்க்கின்றபொழுது நாம் எத்தக ஆபத்தான எதிர்காலத்திற்குள் நுழைந்து கொண்டிருக்கின்றோம், எத்தகைய மோசமான விளைவுகளைச் சந்திக்கயிருக்கின்றோம் என்ற பயமும்




பீதியும் மனதை பற்றிகொண்டது.

சுற்றுச்சூழல் பாதுகாப்பு பற்றி பேசுகின்ற பொழுது பெண்களுக்கான விடுதலையையும் சேர்த்து பேச வேண்டும் என்ற கருத்து முன்வைக்கப்பட்டது. சுற்றுச்சூழலுக்கு ஏற்படுகின்ற அநீதி, பெண்களுக்கு இழைக்கின்ற அநீதி என்றே பெண் பேச்சாளர்கள் விவாதித்தனர்.

ஏழைப் பெண்கள், குழந்தைகள், அன்றாடம் காட்சிகளின் எதிர்காலத்தை தட்பவெட்ப நிலை மாறி வருவது எத்தகைய நெருக்கடிக்கு உள்ளாகும் என்பதையும் சுட்டிக்காட்டினார்கள். உலகம் முழுவதும் சுற்றுச்சூழலை பாதுகாப்பதற்கான பொறுப்பை ஒவ்வொரு குடிமகனும் ஏற்க வேண்டும் என்கின்ற அபாயக் குரல் அங்கே வெளிப்பட்டது.

பல்வேறு இன்னல்களையும் இடையூறுகளையும் வன்முறைகளையும் சந்தித்தவர்களாகத்தான் உலகம் முழுவதும் பெண்கள் இருக்கின்றார்கள். பெண்கள் சந்திக்கின்ற பாலியல் ரீதியான வன்முறைகள் உலகம் முழுவதற்கும் ஒரே அனுபவமாக தான் இருக்கின்றது. இயற்கை பேரிடர், போர்கள், இனக் கலவரம், திடீர் வன்முறை, வறுமை, பட்டினி, கொரோனா ஊரடங்கு என்று எந்த சூழலை எடுத்துக்கொண்டாலும் அதிகமாக பாதிக்கப்படுவது பெண்களும் குழந்தைகளும் மூன்றாம் பாலினத்தவரும் தான். எனவே இவர்கள் ஒன்றுகூடி தங்களுக்கான அடையாளத்தை நிலைநாட்டவும் உரிமைகளைப் பெறவும் தங்களுடைய பிரச்சனைகளுக்கு தீர்வு காணுகின்ற உலகளாவிய மனிதர்களின் தோழமையைப் பெறுவதற்காகவும் உலக சமூக மன்றம் ஒரு பெரிய இடத்தை உருவாக்கியிருந்தது.

சர்வதேச அளவில் இளைஞர்களை ஒருங்கிணைக்கின்ற தளமாகவும் உலக சமூக மாமன்றம் இருந்தது. நவீன டிஜிட்டல் ஊடக உலகத்தில் இளைஞர்கள் எந்த வகையில் எல்லாம் பாதிக்கப்படுகின்றார்கள். டிஜிட்டல் கருவிகளை எப்படி சமூக மாற்றத்திற்கான கருவிகளாக மாற்ற வேண்டும்? எந்தெந்த வகையிலே அவர்கள் ஆக்கபூர்வமான வகையில் செயல்பட வேண்டும் என்பதை அறிவுப்பூர்வமாக விவாதிப்பதற்கும் கலந்துரையாடுவதற்குமான அரங்கத்தை உருவாக்கி இருந்தார்கள்.

இளைஞர்கள் தங்களுடைய தாய் மொழியிலும் ஆங்கிலத்திலும் சொந்த அனுபவத்தையும் கருத்துக்களையும் பகிர்ந்துகொண்டனர். பிரச்சினைகளுக்கு தீர்வு காண டிஜிட்டல் யுகத்தில் எப்படி நாம் புதிய கருத்துக்களையும் ஆலோசனைகளையும் பரிமாறிக்கொள்ள முடியும், அதை மக்களின் ஒருங்கிணைந்த வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் எப்படி பயன்படுத்த முடியும் என்பதை பகிர்ந்துகொண்டனர். குறிக்கோள், தெளிவுடன் பங்கேற்ற இந்த இளைஞர்களின் செயல்பாடு எல்லோருக்கும் நம்பிக்கை தருகின்ற வகையிலே இருந்தது.

ஒட்டுமொத்தமாக, உலக சமூக மாமன்றம் சமத்துவம், சமூக நீதி, சம வாய்ப்பு என்ற உயரிய மதிப்பீடுகளின் அடிப்படையில் பணிசெய்கின்ற மக்களையெல்லாம் ஒருங்கிணைக்கின்ற தளமாக அமைந்தது. மனிதநேயத்திற்காகவும் மனித மாண்புகளுக்காகவும் உலகம் எங்கும் போராடிக் கொண்டிருக்கின்ற குரல்களின் ஒருமித்த சங்கமம் அது. பல்வேறு நாடுகளிலிருந்து கலந்துகொண்ட மனித உரிமை போராளிகள், தங்களுக்குள்ளேயே தோழமையைப் பகிர்ந்துகொள்வதற்கும் வாய்ப்பு உருவாக்கப்பட்டிருந்தது. அது புதிய நம்பிக்கையை தந்தது.

உலக சமூக மான்றத்தின் தொடக்க விழாவில் கலந்துகொண்டு பேசிய ஐக்கிய நாடுகளின் செயலர் அந்தோணியோ குட்டியரசு, “இந்த சமூக உலக சமூக மாமன்றம் நம்முடைய குரல்களை மேலே எழுப்பதற்கான தளத்தை அமைத்துக்கொடுத்துள்ளது. மிகவும் பாதிக்கப்பட்டு கடைநிலையில் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்ற மக்களுக்கு நம்பிக்கை தருகின்ற வகையிலும், தீர்க்க முடியாத பிரச்சினைகளுக்கு பொதுவான தீர்வுகள் தேடுகின்ற தளமாகவும் இது அமைந்திருக்கின்றது. நாம் இந்த பூமியை அமைதியான, சமத்துவமிக்க, ஜனநாயக பூமியாக மாற்ற வேண்டும். எல்லோருக்கும் எல்லாம் கிடைக்கின்ற ஓர் உன்னத உலகமாக மாற்ற வேண்டும்” என வலியுறுத்தினார்.

காட்மண்டு பள்ளத்தாக்கிலே தோன்றிய அவநம்பிக்கை மேகங்களை அகற்றி நம்பிக்கையை விதைக்கும் நிகழ்வுகளை உலக சமூக மாமன்றம் சிறப்பாக நடத்தியுள்ளது. அந்த நம்பிக்கை எவரெஸ்ட் சிகரம் போல பங்கேற்பாளர்களில் மனங்களில் உயர்ந்து நின்றது.

அ. இருதயராஜ் <iruraj2020@gmail.com>

# பாகவதரின் பாடல்கள்

## பாவண்ணன்

ஒருநாள் காலையில் என் அப்பாவை திடீரென நினைத்துக்கொண்டேன். ஒரு காரணமும் இல்லாமல் அவரைப் பற்றிய நினைவுகள் ஒன்றை அடுத்து ஒன்றென நினைவில் மோதிக்கொண்டே இருந்தன. அவருக்கு திரைப்பாடல்கள் மீது விருப்பம் அதிகம். குறிப்பாக தியாகராஜ பாகவதர் பாடல்கள் அவருக்கு மிகவும் பிடித்தமானவை. ஓய்வாக இருக்கும்போதும் தன் போக்கில் தனியாக தையல் எந்திரத்தில் மனமூன்றி தைத்துக் கொண்டிருக்கும் போதும் பாகவதர் பாடலை முணுமுணுத்தபடியே வேலை செய்வார்.

ஒருமுறை நான் கடைக்குச் சென்றிருந்தபோது, அவரும் பக்கத்துக் கடைக்காரர்களான தெய்வநாயகமும் தர்மலிங்கமும் உரையாடிக் கொண்டிருந்தார்கள். அன்று அப்பா எந்த வேலையையும் செய்யவில்லை. வழக்கம்போல என்னிடம் உடனடியாகக் கொடுத்தனுப்ப அவரிடம் பணமில்லை என்பதை அச்சூழலே எனக்கு உணர்த்திவிட்டது. என்னிடம், “சித்த நேரம் உள்ள போய் உக்காரு” என்றார். நான் அமைதியாக அவர்களைக் கடந்து உள்ளே சென்று ஸ்டூலில் அமர்ந்தேன்.



அப்போது மகுடி ஊதிக்கொண்டு ஒரு பாம்பாட்டி கடை வாசலில் வந்து நின்றார். தோளில் ஒரு பக்கம் ஓர் அழுக்குத் துணிமூட்டை தொங்கியது. இன்னொரு பக்கம் பாம்புக் கூடைகளைக் கொண்ட ஓர் அடுக்கு தொங்கியது. ஒரு துண்டுபோல அவர் கழுத்தைச் சுற்றி ஒரு பாம்பு தொங்கியது. அவர் ஒரே நொடியில் அப்பாம்பை எடுத்துதரையில் விட்டுவிட்டு மகுடி எடுத்து ஊதத் தொடங்கினார். அவர் நகர்ந்துபோகும் திசையில் பாம்பும் தன் தலையைத் தூக்கி





அசைந்தது.

பாம்பாட்டி தன் மகுடியை நிறுத்தும்வரைக்கும் பொறுமையாக இருந்த தெய்வநாயகம், "முதல்ல அத எடுத்து உள்ள வை பெரியவரே. அழகா ஒரு பாட்டு பாடு. அது போதும்" என்று சொன்னார். கடையின் படிக்கட்டிலேயே தோள்சுமையை இறக்கிவைத்த அந்தப் பாம்பாட்டி கீச்சுக்குரலில், "ஆடு பாம்பே விளையாடு பாம்பே" என்று பாட்டைத் தொடங்கினார். நாலு வரிகள்தான் அவருக்குத் தெரிந்திருந்தன. அவற்றையே அவர் வெவ்வேறு தாளங்களில் இழுத்து இழுத்துப் பாடினார்.

தெய்வநாயகம் தன் சட்டைப் பையிலிருந்து ஏதோ சில்லறை நாணயங்களை எடுத்துக் கொடுத்தார். அதை வாங்கிக்கொண்டு அந்தப் பாம்பாட்டி சென்றுவிட்டார்.

"குரல் நல்லா இருக்குது. ஆனா, பாம்பு தலையை அசைக்கறதுக்குத் தோதா இழுத்து இழுத்து பாடி பழகிட்டதால, வரியும் இழுத்துகிட்டு போவுது" என்றார் தர்மலிங்கம்.

"டி.எம்.எஸ். குரல்ல கொஞ்சம், பாகவதர் குரல்ல கொஞ்சம் ரெண்டயும் மனசு போன போக்குல கலந்து கட்டி பாடறாரு" என்றார் அப்பா.

"இதுல பாகவதர் எங்க வந்தாரு? கீச்சுக்குரல்ல பாடனத வச்சி சொல்றியா?" என்று கேட்டார் தெய்வநாயகம். "இல்லை, இல்லை. பாம்பாட்டி பாடின மெட்டுல பாகவதரும் ஒரு பாட்டு பாடியிருக்காரு. ஆனா, பாம்பு பாட்டு இல்லை, பாப்பா பாட்டு" என்றார் அப்பா.

"பாப்பா பாட்டா? பாரதியாரு பாட்டுலதான் பாப்பா பாட்டு ஒன்னு வருது. பாகவதரு பாட்டுல எங்க வருது?" என்று இழுத்தார் தெய்வநாயகம். பிறகு அப்பாவிடம், "எங்க, அந்தப் பாட்டுல ரெண்டு வரி சொல்லு பார்ப்போம்" என்றார். அப்பா உடனே, "சொல்லு பாப்பா சொல்லு பாப்பா சுகம்பெற வழி ஒன்னு சொல்லு பாப்பா" என்று அடங்கிய குரலில் பாடிக் காட்டினார். அதைக் கேட்டு தர்மலிங்கமும் தெய்வநாயகமும், "ஆகா. இது அருமையா இருக்குதே. இப்படி ஒரு பாட்ட நாங்க கேட்டதே இல்லையே. பாகவதர் பாடிய பாட்டா இது? முழுசா பாடு பலராமா" என்றனர். அப்பாவும் உற்சாகத்தோடு அந்தப் பாட்டைப் பாடி முடித்தார்.

அந்த நிகழ்ச்சி நினைவுக்கு வந்ததும் அந்தப் பாட்டை உடனே ஒருமுறை கேட்கவேண்டும் போல இருந்தது. யுடியூபில் இருக்கிறதா என தேடிப் பார்த்தேன். கிடைத்துவிட்டது. உடனே அந்தப் பாடலைப் பாடவிட்டு கேட்டேன். மகிழ்ச்சியாக இருந்தது. என் பால்ய காலத்துக்கே ஒருமுறை சென்று திரும்பியதைப்போல இருந்தது. அடுத்தடுத்து இரண்டு முறை கேட்டேன். அன்று முழுதும் அந்தப் பாடல் என் மனத்தில் மிதந்தபடியே இருந்தது. என் உதடுகள் என்னை அறியாமல் அதை முணுமுணுத்தபடியே

இருந்தன.

அன்று மாலை நண்பர் விட்டல்ராவைச் சந்திக்கச் சென்றபோது அந்த நிகழ்ச்சியையும் அந்தப் பாடலையும் சொன்னேன். அதைக் கேட்டு அவர் முகம் மலர்ந்துவிட்டது. நான் ஒரு வரியைத்தான் சொன்னேன். அவர் உடனடியாக முழு பாட்டையும் உற்சாகமாகப் பாடத் தொடங்கிவிட்டார். ஒரு சொல்லுக்காகக்கூட அவர் தடுமாறவில்லை. அவ்வளவு வரிகளையும் என்னமோ நேற்று கேட்ட பாடல்போல அவர் நினைவிலிருந்து பாடினார். மகிழ்ச்சியாக இருந்தது.

"நான் இன்னைக்கு வந்தா பாடிக் காட்டணும்னு ஏற்கனவே முடிவு செஞ்சி வச்ச மாதிரி பாடறீங்களே சார், ஏற்கனவே இந்தப் பாட்டு உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டேன்.

விட்டல்ராவ் புன்னகைத்தார். "எனக்கு மட்டும் இல்ல பாவண்ணன். எனக்கு, எங்க அண்ணனுக்கு, எங்க அக்காக்களுக்கு,என் தங்கச்சிக்கு.எல்லாருக்குமே இந்தப் பாட்டு மனப்பாடம். ஏன் தெரியுமா? இது எங்க அப்பாவுக்கு ரொம்பப புடிச்ச பாட்டு. சத்திய சீலன்ங்கற படத்துல பாகவதர் பாடற பாட்டு இது. அந்தக் காலத்துல அந்தப் பாட்டு ரொம்ப பிரபலம். நாங்க இந்தப் பாட்ட பாடினா, எங்க அப்பாவுக்கு ரொம்ப புடிக்கும்.வெளியே கடைப்பக்கம் போயிட்டு திரும்பும்போது காராபூந்தி, பக்கோடா, முறுக்குன்னு எதையாவது ஆசையா வாங்கியாந்து கொடுப்பாரு" என்றார்.

"எங்க அப்பாவும் அப்படித்தான் சார். பாகவதர் பாட்டுன்னா அவருக்கு உயிரு."

"எங்க அப்பாவும் பாகவதரு பாட்டுன்னா அப்படியே உருகிடுவாரு பாவண்ணன். ராத்திரி நேரத்துல அவரு தூங்கும்போது நானும் எங்க அண்ணனும் அவருக்கு கால புடிச்சி விடுவோம். எங்களுக்கு அந்தக் காலத்துல அது ஒரு தினசரிக் கடமை. அவன் ஒரு பக்கம் உக்காந்து கால அமுக்கிவிடுவான். நான் இன்னொரு பக்கம் உக்கார்ந்து கால அமுக்கிவிடுவேன். நான் ஒரு பாட்டு, அண்ணன் ஒரு பாட்டுன்னு பாகவதர் பாட்ட பாடிகிட்டே கால புடிப்போம். அப்பா கண்ண மூடி அதைக் கேட்டுகிட்டே தூங்கறதுக்கு முயற்சி செய்வாரு. கொஞ்ச நேரத்துக்குப் பிறகு அவர் உடம்புல அசைவு இருக்காது. சரி, தூங்கிட்டாரு போலன்னு நெனச்சி அண்ணன் மெதுவா பாடறத நிறுத்திட்டு கையை எடுப்பான். உடனே கண்ண மூடிகிட்டே அப்பா ஏன்டா நிறுத்திட்டீங்க. பாடுங்கடான்னு சொல்லுவாரு. அவரை நம்பவே முடியாது. மறுபடியும் ஒரு பாட்டத் தொடங்குவோம். அதுக்கப்புறம் அமைதியா இருப்பாரு. அப்புறம் ஏதோ ஒரு கட்டத்துல தூங்கிடுவாரு."

"அந்த சமயத்துல உங்களுக்கு என்ன வயசு இருக்கும் சார்?"

"நான் அப்ப எட்டாவது படிச்சிட்டிருந்தேன். அண்ணன், அக்கா, தங்கச்சிங்க எல்லாருமே படிச்சிட்டிருந்தாங்க. எல்லாருக்கும் ஸ்கூல் பீஸ் கட்டணும். பணத்துக்காக அங்க இங்க அலைஞ்சிகிட்டே இருப்பாரு அப்பா. அங்க வாங்கி இங்க அடைப்பாரு, இங்க வாங்கி அங்க அடைப்பாரு. ஒரு மாதிரி ரொட்டேஷன்லயே வண்டி ஓடிட்டிருந்த காலம் அது. அந்த அலைச்சலால அவருக்கு கால் வலி வந்துடும். பாட்டுதான் எல்லாத்துக்கும் மருந்து."

அதற்குப் பிறகு எங்கள் உரையாடல் எப்படியோ பாகவதரின் பக்கம் திரும்பிவிட்டது.

"பவளக்கொடிதான் பாகவதருக்கு முதல் படம். அவருக்கு அதுல அர்ஜுனன் நானடி மானேன்னு ஒரு பாட்டு. அந்தப் பாட்டக் கேட்டு கிறங்காத ஆளே அந்தக் காலத்துல தமிழ்நாட்டுல இல்லை. ஒரே படத்துல அவர் புகழ் உச்சிக்கு போயிட்டாரு. அவரு மொத்தமா நடிச்சதே பன்னெண்டு பதிமூனு படம்தான். அவரு நடிச்ச அம்பிகாபதி, சிந்தாமணி, திருநீலகண்டர், ஹரிதாஸ், அசோக்குமார் எல்லாமே மாசக்கணக்குல வருஷக்கணக்குல ஓடிய படங்கள். எந்தப் பக்கம் திரும்பனாலும் அந்தக் காலத்துல அவரு பாட்டுதான் கேக்கும். ஆனா, எனக்கு அவருடைய பாட்டு மேல அந்த அளவுக்கு ஈர்ப்பு கிடையாது. எங்க தலைமுறையில வேற சி.எஸ். ஜெயராமன் மாதிரி ஒரு செட் புதுப் பாடகர்கள் வந்துட்டாங்க."

பாகவதருடைய படங்கள் பற்றியும் பாடல்கள் பற்றியும் உற்சாகத்தோடு சொல்லிக்கொண்டே சென்றார் விட்டல்ராவ். இடையிடையில் அவருடைய புகழ்பெற்ற பல பாடல்களின் ஒன்றிரண்டு வரிகளையும் பாடிக்காட்டினார். அவருடைய ஏழெட்டு படங்களை நான் பார்த்திருப்பதாகச் சொன்னபோது, அதைக் கேட்டு அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. "எங்க பார்த்தீங்க? தியேட்டர்ல பார்த்தீங்களா?" என்று ஆவலோடு கேட்டார்.

"பாண்டிச்சேரியில அந்தக் காலத்துல டிக்டாக்னு ஒரு சி.டி. கடை இருந்தது. பழைய படம், புதுப்படம் எல்லாத்துக்கும் அங்க சிடி கிடைக்கும். நான் ஊருக்குப் போகும்போதெல்லாம் அங்க போயி ஒரு பத்து பதினஞ்சி பழைய படம் சி.டி. வாங்கிட்டு வருவேன். பாகவதர் படம், சின்னப்பா படம்லாம் அப்படித்தான் பார்த்தேன்."

"இன்னும் இருக்குதா அந்தக் கடை?"

"இருக்குது சார். ஆனா, இப்ப சி.டி. வியாபாரம் கிடையாது. பென் ட்ரைவ் எடுத்துட்டு போனா அதுல புதுப்படங்கள டௌன்லோட் செஞ்சி பதிஞ்சி குடுத்துடுவாங்க. ஆனா, இப்ப நாலஞ்சி வருஷமா நான் அந்தக் கடைப்பக்கம் போகிறதில்லை. எல்லாமே

புதுப்படங்கள வச்சிருக்காங்க. பழைய படங்களைக் கேட்டா இல்லை இல்லைன்னு சொல்லிடறாங்க. எனக்கு புதுப்படங்கள் மேல பெரிய ஆர்வமெதுவும் இல்லை. அதனால போகிறதயே விட்டுட்டேன்."

"போதும்போதும்ங்கற அளவுக்கு இப்ப எல்லாமே யுடியூப்ல கிடைக்கும்போது, சி.டி.ய தேடிப் போகிற அவசியமே இல்லாம போயிட்டுது பாவண்ணன். தேவைப்படும்போது நானும் இப்ப சில படங்களை யூடியுப்லதான் பார்க்கறேன்."

"நீங்க பாகவதரை நேருல பார்த்திருக்கீங்களா சார்?" என்று உரையாடலை மீண்டும் பாகவதர் தொடர்பானதாக மடைமாற்றினேன்.

அந்தக் கேள்வி அவரை மீண்டும் உற்சாகமானவராக்கிவிட்டது. ஒரு சிறு கனைப்போடு மீண்டும் பேசத் தொடங்கினார்.

"பார்த்திருக்கேன் பாவண்ணன், பார்த்திருக்கேன். ரொம்ப பக்கத்துல பார்க்கிற தூரத்துல நின்னு திருப்தியா பார்த்திருக்கேன். அது மட்டுமில்லை, அவருடைய ஒரு முழு கச்சேரியையே முன்வரிசையில உக்காந்து கேட்டிருக்கேன்."

அந்தப் பதிலைக் கேட்டு நானும் உற்சாகம் கொண்டேன். "எப்ப சார் பார்த்தீங்க? எங்க பார்த்தீங்க?" என்று கேள்விகளை அடுக்கினேன்.

"நாங்க கிருஷ்ணகிரியில இருந்த சமயத்துல, ஒரு கச்சேரிக்காக பாகவதர் வந்திருந்தாரு."

நான் வாய் பிளந்தபடி அவரையே பார்த்திருந்தேன்.

"கிருஷ்ணகிரியிலேர்ந்து சென்னைக்குப் போற வழியில காட்னாம்பட்டின்னு ஒரு ஊரு இருக்குது. நாங்க வாடகைக்கு குடியிருந்த இடத்துலேர்ந்து ஒரு ரெண்டு கிலோமீட்டர் தொலைவுதான் இருக்கும். அங்க ஒரு மலை உண்டு. அந்த மலையை ஒட்டி ஒரு முருகன் கோவில் உண்டு. சுத்துவட்டாரத்துல ரொம்ப புகழ் பெற்ற கோவில். பெரிய பெரிய பணக்காரர்கள் எல்லாம் அந்தக் கோவிலுக்கு புரவலரா இருந்திருக்காங்க. எங்க அப்பாவுக்கு அடிக்கடி அந்தக் கோவிலுக்கு போகிற பழக்கம் இருந்திச்சி. அப்பப்ப எங்களயும் கதை சொல்லிகிட்டே அந்தக் கோவிலுக்கு அழச்சிகிட்டு போவாரு."

நான் அந்தக் கோவிலைப் பற்றி கேள்விப்பட்டதில்லை. அதனால், "பெரிய கோவிலா சார்?" என்று கேட்டேன்.

"மைலம், திருப்பரங்குன்றம் மாதிரி பெரிய கோவில் கிடையாது. அதே சமயத்துல ரொம்ப சின்ன கோவிலும் கிடையாது. பார்க்கிறதுக்கு நல்ல உயரமான தோற்றமுண்டு. அந்தப் பக்கம் போகிறவங்க யாரா இருந்தாலும் ஒரு ரெண்டு நிமிஷம் நின்னு பார்த்துட்டுத்தான் போவணும். அந்த அளவுக்கு கவனத்தை ஈர்ப்பதாக இருக்கும்."

"சரி."

'அந்தக் கோவில்ல வருஷாவருஷம் ரொம்ப தடபுடலா தைப்பூசம் கொண்டாடுவாங்க. மொத்தம் பதினஞ்சி நாள் நடக்கும். ஒவ்வொரு நாளும் ஒரு திருவிழா மாதிரி இருக்கும். ஊருக்காரங்க, வியாபாரிங்க எல்லாரும் பணம் போட்டு சேர்ந்து நடத்துவாங்க. ரொம்ப பிரமாதமா இருக்கும். அந்தச் சமயத்துல தெனமும் மதியானத்துல ஒரு வேளை அந்தக் கோவில்ல அன்னதானம் நடக்கும். கோவிலுக்கு வரக்கூடிய எல்லாருக்கும் எந்த வித்தியாசமும் இல்லாம குடுப்பாங்க."

"விருந்து சாப்பாடா?"

"அப்படிச் சொல்லமுடியாது. ரொம்ப எளிமையான சாப்பாடுதான். பெரிய பாத்திரத்துல சோறு வடிச்சி சாம்பார ஊத்தி நல்லா கிளறி வச்சிருப்பாங்க. துணைக்கு ஒரே ஒரு காய்ப்பொரியல். தைப்பூசம் நடக்கிற பதினஞ்சி நாள் வரைக்கும் தெனமும் கொடுப்பாங்க."

"அன்னதானத்துக்குன்னு அங்க தனியா ஏதாவது மண்டபம் இருக்குதா? அல்லது பந்தல் மாதிரி ஏதாவது ஏற்பாடு இருந்ததா?"

"அப்படியெல்லாம் எந்த ஏற்பாடும் கிடையாது. கோவிலுக்குள்ள ஒரு தூணோரமா சாப்பாட்டு அண்டாவை வச்சிருப்பாங்க. இலைபோட்டு சாப்பாடு போடறதெல்லாம் கிடையாது. கரண்டியால எடுத்து கொடுப்பாங்க. தட்டு மாதிரி பாத்திரங்களை எடுத்தும் போயியும் வாங்கமுடியாது. போய் நின்னு கையிலதான் வாங்கிட்டு போவாங்க. மேல்துண்டு வச்சிருக்கிறவங்க, அந்தத் துண்டுலயே வேணும்ங்கற அளவுக்கு வாங்கிக்கலாம். பெண்கள் கூட்டம் அப்படியே முந்தானையில வாங்கி வச்சிகிட்டு சாப்புடுவாங்க. எப்படியா இருந்தாலும் அந்த இடத்துலயே மிச்சம் வைக்காம சாப்புடணும். வீட்டுக்கு எடுத்துட்டு போவக் கூடாது. அதான் ஒரே நிபந்தனை."

"ஏன் சார் அப்படி?"

"அது அப்படித்தான் பாவண்ணன். அன்னதானம்னு சொன்னாலும் அது கோவில் பிரசாதம் மாதிரி. அங்கயே வாங்கி அங்கயே சாப்ட்டு முடிக்கணும். காலம்காலமா அப்படி ஒரு பழக்கம் அந்த ஊருல இருக்குது."

"நீங்க அங்க போனதுண்டா?"

"நான் மட்டுமில்லை. எங்க அப்பா, எங்க அண்ணன், அக்கா, தங்கச்சி எல்லாருமே அங்க போய் அன்னதானத்துல கலந்துக்குவோம். பணத்துக்கு கொஞ்சம் தட்டுப்பாடான நேரம் அது.

அந்த அன்னதானம் எங்களுடைய ஒரு வேளைப் பசியைப் போக்கிக்க ஒரு வழியா இருந்தது. திருவிழா நடக்கற பதினஞ்சி நாளும் நாங்க அன்னதானத்தை தவறவிட்டதே இல்லை.”

“அன்னதானம் ஒருவேளை மட்டும்தானா?”

“ஆமாமாம். ஒரு நாளைக்கு ஒரு வேளை. அவ்ளோதான். சாப்பாடு முடிஞ்சதும் திருவிழாவை சுத்திச்சுத்தி வந்து வேடிக்கை பார்த்துட்டு நின்னிட்டிருப்போம்.”

தொடர்ந்துபேசிக்கொண்டேஇருந்தவிட்டல்ராவ் ஒரு நொடி நிறுத்தி, “பாகவதரைப் பத்தி அப்புறம் சொல்றேன். அன்னதானத்த நெனச்சிகிட்டதும் வேற ஒருத்தரு ஞாபகத்துக்கு வந்துட்டாரு. இப்ப அவரைப் பத்தி சொல்றேன் கேளுங்க. அந்த ஊருல அவரு ஒரு முக்கியமான ஆளு” என்றார்.

“முக்கியமானவரா? யாரு சார் அவரு?” என்று நான் அவர் முகத்தை ஆவலோடு பார்த்தேன்.

“சொல்றேன். சொல்றேன். அவரு பேரு சட்டிச் சாமியாரு.”

“என்னது? சட்டிச் சாமியாரா?”

“ஆமாம் பாவண்ணன். அப்படித்தான் அந்த ஊருல அவரை எல்லாரும் கூப்பிடுவாங்க. எல்லா நேரமும் தலையில தொப்பி மாதிரி ஒரு சட்டியை கவுத்து வச்சிட்டிருப்பாரு. அதனால அவருக்கு அந்தப் பேரு வந்துட்டுது.”

“சரி சரி. சொல்லுங்க”

“அந்தச் சட்டிச் சாமியாருக்கு வாய் பேச வராது. வெறும் கைஜாடை கண்ஜாடை மட்டும்தான். வேட்டி சட்டையெல்லாம் கிடையாது. அவரு உடம்புல வெறும் கோவணம் மட்டும்தான் இருக்கும். வெயிலா இருந்தாலும் மழையா இருந்தாலும் அதுதான் அவருடைய உடை.”

அந்தச் சாமியாரைப் பற்றிய விவரணை ஆர்வமூட்டுவதாகவும் ஆச்சரியம் நிறைந்ததாகவும் இருந்தது.

“அன்னதானத்துக்கு பிரசாதம் தயாரானதும் நிர்வாகத்துல இருக்கிற பெரியவங்க அந்தப் பானையை எடுத்துவந்து கோவில் வாசல்ல வச்சிடுவாங்க. அங்க சட்டி சாமியாரு தயாரா இருப்பாரு. தயாரா வச்சிருக்கிற நீளமான ஒரு தாம்புக்கயிறை எடுத்துவந்து அவருகிட்ட கொடுப்பாங்க. அவரு அந்தக் கயித்துடைய ஒருமுனையை அந்தப் பானையுடைய கழுத்துல கட்டிடுவாரு. இன்னொரு முனையை அவரு தன்னுடைய இடுப்புல கட்டிக்குவாரு. பிறகு கோவில் கோபுரத்தைப் பார்த்து ஒரு கும்பிடு போட்டுட்டு மெதுவா பானையை இழுத்துட்டு நடப்பாரு. கரணம் தப்பினா மரணம் கதைதான். ஒரே ஒரு நொடி கவனக்குறைவா இருந்தாலும் போச்சி. பானை உருண்டு கீழ கவுந்து பிரசாதம் மண்ணுல கலந்துடும். உடைஞ்சி போகிறதுக்கும் வாய்ப்பு உண்டு. ஆனா, எந்த அசம்பாவிதமும் நேராம அந்தச் சட்டிச் சாமியாரு அங்குலம் அங்குலமா ஒரு தேரை நகர்த்திட்டு போகிறமாதிரி அந்தப் பானையை சமநிலையோடு இழுத்துகிட்டு போவாரு. அவரு பின்னாலயே ஜனங்க அரோகரா அரோகரான்னு சத்தம் குடுத்துகிட்டே போவாங்க. நானும் அதை வேடிக்கை பார்த்துகிட்டே பின்னால போவேன். அடிஅடியா நடந்து கோவிலை சுத்தி வந்து மறுபடியும் வாசல்ல வந்து நிப்பாரு சாமியாரு. அங்க நின்னவாக்கிலயே கொடிமரத்தைப் பார்த்தபடி நெடுஞ் சாண்கிடையா தரையில விழுந்து வணங்குவாரு. அதுக்கப்புறம் எழுந்து பிரசாதத்துலேர்ந்து ஒரு கை எடுத்து வாய்ல போட்டுக்குவாரு. இடுப்ப சுத்தி கட்டியிருந்த கயித்தை அவுத்து அங்கயே போட்டுட்டு திரும்பிப் பார்க்காம போயிடுவாரு. ஒவ்வொரு வருஷமும் அப்படி ஒரு சடங்கு நடக்கும்.”

அந்தச் சாமியாரின் கதை மிகவும் ஆச்சரியமாக இருந்தது. உலகில் நம் எளிய தர்க்கங்களால் புரிந்துகொள்ள முடியாதபடி எப்படியெல்லாம் விசித்திரமான மனிதர்கள் நிறைந்திருக்கிறார்கள் என நினைத்துக்கொண்டேன். “எப்பவாவது அந்தப் பானை சரிஞ்சி பிரசாதம் தரையில விழுந்ததுண்டா?” என்று சந்தேகத்தோடு கேட்டேன்.

விட்டல்ராவ் உதடுகளைப் பிதுக்கி இல்லை என்பதுபோல தலையசைத்தார். “நான் பார்த்த வரையில ஒருமுறை கூட சட்டிச் சாமியாரு இழுத்துட்டு போன பானை தரையில சரிஞ்சதே இல்லை. ஏதோ ஒரு தெய்வ சக்தி அந்த சாமியாருகிட்ட இருந்ததுன்னுதான் ஊரு மக்கள் நம்பினாங்க. அந்தச் சாமியாரு கோவிலவிட்டு எங்கயும் போறதில்லை. அவர் வாழ்க்கையே கோவில் வாசல்தான். ஏதோ ஒரு சித்தர் மாதிரிதான் அவருடைய வாழ்க்கை இருந்தது. அவருக்கு பேச வராதுங்கறதால அவருகிட்ட விசாரிச்சி தெரிஞ்சிக்கவும் முடியலை.”

விட்டல்ராவ் சொன்ன தகவல்களை இணைத்து அந்தச் சாமியாரைப் பற்றிய ஒரு சித்திரத்தை என் மனத்துக்குள் கொஞ்சம்கொஞ்சமாகத் தீட்டத் தொடங்கினேன்.

“அந்த சாமியாரைப் பத்தி இன்னும் ஒரு முக்கியமான தகவல் இருக்குது பாவண்ணன். அதையும் சொல்லி முடிச்சிடறேன். அதுக்கப்புறம் பாகவதரப் பத்தி பேசலாம்” என்றார் விட்டல்ராவ்.

“சொல்லுங்க சார்” என்றேன் நான்.

“ஒருமுறை திருவிழா சமயத்துல காட்னாம்பட்டி முருகன்கோவிலுக்குஒருசிவாச்சாரியார்வந்திருந்தாரு.

எந்த ஊரோ தெரியலை. முருகன் கோவில் பக்கமா வந்தாரு. அப்படியே கோவிலுக்குள்ள வந்திட்டாரு. தலையெல்லாம் திரிதிரியா முடி வளர்ந்து தொங்குது. உடம்பு முழுக்க பட்டைபட்டையா திருநீறு பூசியிருந்தாரு. நம்ம ஊரு திருவிழாவுக்கு வந்திருக்கிறார் போலன்னு நெனச்சிகிட்டு ஊருல இருந்தவங்களும் அவருக்கு மரியாதை செஞ்சி உக்கார வச்சிருந்தாங்க."

"சரி."

"அந்த நேரத்துலதான் கோவிலுக்கு வெளிய கூட்டம்கூட்டமா சட்டிச்சாமியார் பின்னால மக்கள் அரோகரா அரோகரான்னு சொல்லிகிட்டு போறத அந்தப் பெரிய சாமியாரு பார்த்திருக்காரு. கொஞ்ச நேரம் அவரும் வேடிக்கை பார்த்தபடி சும்மா இருந்திருக்காரு. சட்டி சாமியாரு கோவில சுத்தி ஒரு முழு வட்டம் சுத்தி வந்து கோவில் வாசல்ல விழுந்து வணங்கிட்டு எழுந்து நின்னு இடுப்புல இருக்கிற கயித்த அவுத்து கீழ வைக்கிற சமயத்துல விறுவிறுன்னு நடந்து அவருக்கு பக்கத்துல போயிட்டாரு."

"அப்புறம்?"

"ஜடாமுடியோடு ஒருபெரிய சாமியாரு பக்கத்துல வந்துநிக்கறத பார்த்துட்டு சட்டி சாமியாருக்கு ஒன்னும் புரியலை. அவரைப் பார்த்து சிரிச்சாரு. ஆனா, அந்தப் பெரிய சாமியாரால அந்தப் புன்னகையை ஏத்துக்க முடியலை. தன்னுடைய கண்முன்னால சட்டி சாமியாருக்குக் கிடைச்ச கௌரவம் அவரை ஏதோ பண்ணிடுச்சின்னு நெனைக்கறேன். அவரால அதை சுலபமா எடுத்துக்க முடியலை."

"சாமியார் உலகத்துக்குள்ளயும் ஊடுருவிப்போகிற சக்தி ஆணவத்துக்கு இருக்குது சார்."

"ஆமாம். முதல்ல வேகமா சட்டி சாமியாரைப் பார்த்து கோவணம் கட்டிகிட்டா பெரிய சாமியாராயிடலாம்னு நெனச்சிட்டியா நீன்னு கேட்டாரு. ஊருக்காரங்க எல்லாரும் உன்ன சாமின்னு கூப்பிட்டா நீயும் உன்ன சாமின்னு நம்பிடுவியான்னு அடுத்தபடி வேகமா கேட்டாரு. வாய் பேச முடியாத சட்டி சாமியாரால எப்படி பதில் சொல்லமுடியும்? அது அந்த ஜடாமுடி சாமியாருக்குப் புரியலை. ஒரு இடைவெளியே விடாம தொடர்ச்சியா ஏதேதோ கேள்விகள் கேட்டுகிட்டே இருந்தாரு. சட்டி சாமியாரால தாங்க முடியலை. அவர் அந்த இடத்துலேர்ந்து ஒன்னு சத்தம் போட்டபடி கோவில சுத்திகிட்டு பின்பக்கமா ஓட ஆரம்பிச்சிட்டாரு. பின்பக்கம் ஒரு மொட்டைமலை. வேகமா அதும் மேல ஏறி ஓட ஆரம்பிச்சிட்டாரு. யாருக்குமே என்ன நடக்குதுன்னு புரியலை. அதுக்குள்ள ரொம்ப தூரம் மேல ஏறி போயிட்டாரு சட்டி சாமியாரு."

"ஐயையோ."

"அந்த மலைக்குப் பின்பக்கமா ஒரு மொட்டைப்பாறை இருந்தது. அதும் மேல ஏறி நின்னு ஒரு நிமிஷம் ஊரப் பார்த்தாரு. கோவில பார்த்தாரு. அப்புறம் அங்கேயிருந்து தாவி கீழ விழுந்து அடிபட்டு செத்துட்டாரு. வாயில்லாத மனுஷன் என்ன சொல்ல நினைச்சாரோ தெரியலை. ஆயிரக்கணக்கான ஜனங்க பார்த்துட்டிருக்கும்போதே கண்ணு முன்னால தலை உடைஞ்சி செத்துப் போயிட்டாரு."

அந்த முடிவு என்னைத் திகைக்க வைத்தது. ஒருகணம் என்னால் எதுவுமே பேசமுடியவில்லை.

"அப்புறம்?"

"அப்புறமென்ன? ஊருகாரங்க அந்த சட்டிச்சாமியாருடைய உடலைத்தேடிக்கண்டுபுடிச்சி தகனம் செஞ்சாங்க. ஜடாமுடி சாமியார் அந்த ஊரைவிட்டே கௌம்பி போயிட்டாரு."

எதார்த்த நிகழ்ச்சிகள் புனைவைவிட குரூரமானவை என்பதை ஆழ்மனம் உணர்ந்திருந்தாலும், விட்டல்ராவ் விவரித்த நிகழ்ச்சியின் குரூரம் உறையவைத்துவிட்டது. அடுத்து என்ன பேசுவது என்று தெரியாமல் குழப்பத்தோடு அமர்ந்திருந்தேன்.

மேசை மீது வைத்திருந்த குவளையிலிருந்து தண்ணீரை ஊற்றி அருந்தினார் விட்டல்ராவ். பிறகு உதடுகளைத் துடைத்தபடி அவராகவே, "இப்ப பாகவதர் கதைக்கு வரேன்" என்று தொடங்கினார். "காட்னாம்பட்டி கோவிலை பத்தி சொல்லத் தொடங்கியதுமே அந்த சாமியார் கதை ஞாபகத்துக்கு வந்துட்டுது. அதை சொல்லாம இருக்கமுடியலை" என்றார். அந்த உரையாடலையே பாகவதரிடமிருந்துதான் தொடங்கினோம் என்பது எனக்கு அப்போதுதான் ஞாபகத்துக்கு வந்தது. அந்த அளவுக்கு சட்டிச்சாமியாரின் கதையில் நான் கரைந்து போயிருந்தேன்.

ஒரு பெருமூச்சோடு சாமியார் கதையை மனசுக்குள்ளேயே ஒருபுறம் ஒதுக்கி வைத்துவிட்டு, "சொல்லுங்க சார்" என்று நானும் உற்சாகமாக இருப்பதுபோல காட்டிக்கொண்டேன்.

"பதினஞ்சி நாள் திருவிழா நடக்கும்னு சொன்னேனில்லையா? கோவில் வாசல்ல ஒரு பெரிய மேடை போட்டிருப்பாங்க. ஒவ்வொரு நாளும் சாயங்காலம் ஆறுமணிக்கு கோவிலுக்குள்ள விளக்கு போட்டதும் அந்த மேடையிலயும் விளக்கு எரியும். ஒரு பெரியவரு வந்து கந்தபுராணம் படிப்பாரு. நடுநடுவுல கதைகள் எல்லாம் சொல்வாரு. கேக்கறதுக்கு சுவாரசியமா இருக்கும். ஒரு ஏழு மணி வரைக்கும் அது ஓடும். இடைப்பட்ட நேரத்துல கொஞ்சம் கொஞ்சமா ஊருகாரங்க எல்லாரும் மேடைக்கு முன்னால இடம் புடிச்சி உக்காருவாங்க. தெருவே அடைஞ்சி போயிடும். அதுக்கப்புறம் ஒரு எள்ளு

விழக்கூட இடம் இருக்காது.”

“ஏன் அப்படி?”

“ஏழு ஏழரை மணி வரைக்கும்தான் அந்தக் கந்தபுராணம். அதுக்கப்புறம் இசைக் கச்சேரி. அது ஒரு ரெண்டுமூனு மணி நேரம் ஓடும். அதுக்குத்தான் மக்கள் முன்னாலயே வந்து இடம் புடிச்சிடுவாங்க. இசைக் கச்சேரி ஆரம்பிச்ச பிறகு போகலாம்ன்னு நெனைக்கறவங்க கடைசியிலதான் உக்காந்து கேக்கணும். மைக் இருக்கறதால பாடறவங்க குரல் மட்டும் நல்லா கேக்கும். ஆனா, முகத்தைப் பார்க்க முடியாது.”

“சரி.”

“காட்னாம்பட்டியில முதல் கச்சேரி எப்பவும் கே.பி. சுந்தராம்பாள் கச்சேரிதான். அருமையா பாடி ஆரம்பிச்சி வைப்பாங்க. அடுத்தநாள் லோகநாதன் கச்சேரி. அதுக்கப்புறம் சி.எஸ். ஜெயராமன் பாடுவாரு. அதுக்கப்புறம் நம்ம தியாகராஜ பாகவதர் வருவாரு.”

“அதுக்கப்புறம் ஆலந்தூரு பிரகாஷ், பித்துக்குளி முருகதாஸ்னு அன்னைக்கு பிரபலமா இருந்த எல்லாரும் வந்து பாடுவாங்க.”

“சரி.”

“பாகவதர் முதல்ல கோவில் சன்னிதியில பாடவேண்டிய முருகன் பாடல்கள், விநாயகர் பாடல்கள். சிவனைப் பற்றிய பாடல்கள்னு வரிசையா ஒரு பத்து இருபது பாட்டு பாடுவாரு. அமுதமா இருக்கும். ஒவ்வொரு பாட்டு முடிஞ்சதும் ஜனங்க கைதட்டல்ல கோபுரமே இடிஞ்சி விழுந்துவிடற மாதிரி இருக்கும். ஒரு மணி நேரம் அப்படி சளைக்காம பாடுவாரு. அவரைச் சுத்தி உக்காந்திருக்கும் தாளக்காரங்க, பின்பாட்டுக்காரங்க எல்லாருமே ரொம்ப உற்சாகமா இருப்பாங்க.”

“அதுக்கப்புறம்?”

“அதுக்கப்புறம் முன்வரிசையில் உட்கார்ந்திருக்கிற பெரிய மனிதர்கள் தங்களுக்கு புடிச்ச பாட்டுடைய வரிகளை ஒரு துண்டு சீட்டுல எழுதி மேடைக்கு அனுப்புவாங்க. பாகவதர் அந்த வரியைப் படிச்சிட்டு உடனே அந்தப் பாட்டைப் பாடுவாரு. நீங்க எனக்கு அனுப்பி வச்சீங்களே, சொல்லு பாப்பா சொல்லு பாப்பான்னு ஒரு பாட்டு, அந்தப் பாட்டை அவர் பாடாத மேடையே இல்லை. எல்லாருமே அந்தப் பாட்டுக்காக சீட்டு அனுப்புவாங்க. பாரதியார் பாடிய ஓடி விளையாடு பாப்பா பாட்டுக்கு கிடைச்ச வரவேற்பு மாதிரி பாகவதருடைய பாப்பா பாட்டுக்கும் வரவேற்பு இருந்தது.”

“நேயர் விருப்பம் மாதிரியா சார்?”

“ஆமாம். அதே மாதிரிதான். மேடைக்கு சீட்டு குடுத்து அனுப்புறவங்க சின்னவங்களா பெரியவங்களா, ஆணா பெண்ணா அதை எதையுமே பாகவதர் பார்க்கமாட்டாரு. ஒவ்வொரு பாட்டையும் ரசிச்சி பாடுவாரு.”

“நீங்க எங்க உக்காந்திருப்பீங்க?”

“நாங்கதான் சாயங்காலமே போய் இடம் புடிச்சி உக்காந்திடற ஆளாச்சே. பாடகர முழுசா பாக்கற அளவுக்கு சரியான இடத்துல நாங்க எல்லாருமே உக்காந்து கேப்போம். எங்க குடும்பத்துல எல்லாருக்குமே இந்தப் பாட்டுப் பைத்தியம் உண்டு.”

“எத்தனை மணி நேரம் பாடுவாரு?”

“ஒன்பது மணிக்கு முடிக்கணும். அதுதான் கணக்கு. அப்பதான் அடுத்து பத்து மணிக்கு தெருக்கூத்த ஆரம்பிக்க முடியும். ஆனாலும் ரசிகர்கள் யாரும் ஏமாந்துடக்கூடாதுன்னு அவரு பத்துமணி வரைக்கும் பாடிகிட்டே இருப்பாரு. அவர் மேடையை விட்டு எறங்கி நடக்கும்போது ஜனங்க தரையில விழுந்து வணங்குவாங்க. அந்த அளவுக்கு அவரு மேல பக்தி வச்சிருந்தாங்க. அவருடைய குரலுக்கு அப்படி ஒரு வசீகரம் இருந்தது. அவர் பாடிய பாடல்கள் எல்லாமே கர்நாடக சங்கீதத்தின் ராக மெட்டுகளை அடிப்படையாகக் கொண்டவைதான். ஆனால், அதையெல்லாம் கூட மக்கள் ரசிக்கும் விதத்துல அவரால பாடமுடிஞ்சது. அதுதான் அவருடைய பெரிய சாதனை.”

“உண்மைதான் சார்.”

“அதைவிடவும் முக்கியமான ஒரு சாதனையையும் அவர் செஞ்சிருக்காரு பாவண்ணன். அதையும் தெரிஞ்சிக்கணும்.”

“என்ன சார்? சொல்லுங்க.”

“பாகவதவருடைய பாட்டுக்கும் நடிப்புக்கும் மக்கள் நடுவுல இருக்கிற ஆதரவை தனக்குச் சாதகமா பயன்படுத்திக்கணும்ங்கற எண்ணத்தோடு அந்தக் காலத்துல இங்க்லீஷ் கவர்ன்மெண்ட் ஒரு நாடகம் போட்டாங்க. பாகவதாரல முடியாதுன்னு சொல்ல முடியலை. அரசாங்கத்து அதிகாரிகள் கோரிக்கையை மறுக்கமுடியாத நிலை. அவருதான் அந்த நாடகத்துல கதாநாயகன். நல்லபடியா நடிச்சி குடுத்தாரு. அதிகாரிகள் எதிர்பார்த்ததைவிட பல மடங்கு கூடுதலான பணம் வசூலாயிடுச்சி. அதனால அரசாங்க அதிகாரிகள் திருச்சிக்குப் பக்கத்துல திருவெறும்பூர்னு ஒரு கிராமத்தையும் ஒரு லட்சம் ரூபாய் பணத்தையும் அவருக்கு அன்பளிப்பா கொடுத்தாங்க. பாகவதர் அந்தக் கிராமத்தை அரசாங்கத்துக்கே திருப்பிக் கொடுத்துட்டாரு. அந்தப் பணத்தை வாங்கி சுதந்திரப் போராட்ட நிதிக்கு தன் பங்கா இருக்கட்டும்னு காங்கிரஸ் கட்சிக்குக் கொடுத்துட்டாரு. அந்த அளவுக்கு



கிருஷ்ணா ராவ் (விட்டல்ராவ் தந்தை)

தாராள மனம் உள்ளவராதான் அவர் வாழ்ந்தார். பாகவதரைப் பத்தி சொல்ற எல்லாருமே அவருடைய பிற்கால வாழ்க்கையில் ஏற்பட்ட சரிவுகளைத்தான் சொல்றாங்களே தவிர, இதையெல்லாம் சொல்றதே கிடையாது. எதுவா இருந்தாலும் நல்லது கெட்டது ரெண்டயும் சீர்தூக்கிப் பார்த்து பேசணுமில்லையா? அந்தக் குணம் நம்மகிட்ட கிடையவே கிடையாது பாவண்ணன்."

அவர் சொல்வது முற்றிலும் உண்மை என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிந்தது. 'ஆற்றங்கரையின் மரமும் அரசறிய வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே' என்ற ஔவையின் பாடல் வரிகளை நினைத்துக்கொண்டேன். அந்தப் பாட்டுக்கு பாகவதரின் வாழ்க்கை ஓர் எடுத்துக்காட்டாக அமைந்துவிட்டது என்று தோன்றியது.

"ஏராளமான பாடல்களை அவர் சினிமாவுக்காக பாடினார் பாவண்ணன். அதுக்கெல்லாம் அழிவே கிடையாது. எப்பவும் இந்த மண்ணுல நிலைச்சி நிக்கும். எந்தப் படத்துலயும் இடம்பெறாத ரெண்டு பாட்டு அவரு பாடியிருக்காரு அவரு. அதுக்கு சினிமா பாட்டுகளைவிட கூடுதலான மதிப்பு உண்டு. அந்த ரெண்டு பாட்டையும் சேர்ந்து ஒரு தனி இசைத்தட்டா அந்தக் காலத்துல வெளியிட்டாங்க."

"என்ன பாட்டு சார் அது?"

"ரொம்ப முக்கியமான பாடல்கள். காந்தியடிகள் சுடப்பட்டு இறந்ததுமே ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமா அஞ்சலி செலுத்தினாங்க. பாகவதர் தனக்கே உரிய விதத்துல ரெண்டு பாட்டு பாடி இசைத்தட்டா வெளியிட்டு அஞ்சலி செலுத்தினார்."

நான் அதுவரை அறிந்திராத செய்தியாக அது இருந்தது. அந்தப் பாட்டை உடனடியாகக் கேட்க வேண்டும் போல ஆர்வமெழுந்தது.

"அந்தப் பாட்டு எங்க அப்பாவுக்கு ரொம்ப புடிக்கும். எனக்கும் புடிக்கும். அடிக்கடி அந்தப் பாட்டுகளைப் பாட வச்சி கேட்பாரு."

"அந்தப் பாட்டின் வரிகள் ஞாபகம் இருக்குதா சார்" என்று கேட்டேன்.

கொஞ்சம் கூட தயக்கமில்லாமல், "பாட்டே ஞாபகம் இருக்குது பாவண்ணன்" என்றார் விட்டல்ராவ். அக்கணத்தில் நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. "ஒரு தரம் பாடறீங்களா சார்?" என்று கேட்டேன்.

உடனே தொண்டையைச் செருமி பாட்டைத் தொடங்கினார் விட்டல்ராவ். "கைமாறு செய்வதுண்டோ - காந்திஜிக்கு கைமாறு செய்வதுண்டோ" என்று முதல் பாட்டைத் தொடங்கினார். மனத்தை உருக்கும் வரிகள். அது முடிந்ததுமே, "காந்தியைப் போலொரு சாந்த சொரூபனைக் காண்பதும் எளிதாமோ" என்று இரண்டாவது பாட்டையும் பாடினார். இரண்டையும் அவர் மனப்பாடமாகவே பாடியதைக் கேட்டு நான் வியப்பில் ஆழ்ந்தேன்.

அவர் பாடி முடித்த பிறகு அந்தப் பாடல்களை நான் கைப்பேசி வழியாக இணையத்தில் தேடி இருக்குமிடத்தைக் கண்டுபிடித்தேன். "இன்னொரு தரம் இதே பாடல்களை பாகவதர் குரல்லியே கேக்கலாமா சார்?" என்று விட்டல்ராவிடம் கேட்டேன்.

"தாராளமா வைங்க பாவண்ணன். கேப்போம்" என்றார். அடுத்த கணம் நான் கைப்பேசியை இயக்கினேன். காந்தம்போன்ற பாகவதரின் குரலில், "கைமாறு செய்வதுண்டோ - காந்திஜிக்கு கைமாறு செய்வதுண்டோ" என்னும் பாடல் ஒலிக்கத் தொடங்கியது.

பாவண்ணன்

<writerpaavannan2015@gmail.com>

published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.

Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.
Editor : PRABHU THILAAK

